# இது தடை செய்யப்பட்ட பகுதி



AREA CLOSED KEEP OUT



ராஜேஷ் குமார்



http://www.pustaka.co.in

# இது தடை செய்யப்பட்ட பகுதி!

# Ithu Thadai Seiyapatta Paguthi!

Author:

ராஜேஷ் குமார்

Rajesh Kumar

***

## இது தடை செய்யப்பட்ட

## பகுதி!

பொருளடக்கம்

***

# 1

நமக்குப் புரியாத விஷயங்கள் - **1**

பூமியின் அச்சு சாய்வாக இருப்பதால்தான் நமக்கு கோடை காலம், குளிர்காலம், இலையுதிர் காலம், மழைக் காலம் என்று நான்கு பருவகாலங்கள் கிடைக்கின்றன. நாட்டுக்கு நாடு பருவகாலம் மாறுபடுகிறது. ரஷ்யாவில் ஜனவரி மாதம் கடுமையான குளிர் காலம். உறைபனி கொட்டும். அதே நேரம் ஆஸ்திரேலியாவில் ஜனவரி மாதம் வெய்யில் அனல் மாதிரி கொளுத்தும். இப்படிப்பட்ட நேர் எதிரான பருவங்களுக்கு காரணம் பூமி ஒரு பக்கமாகச் சாய்ந்து சுற்றுவதுதான். சரி, பூமியின் அச்சு சாய்வாக இல்லாமல் நேராக இருந்து ஒரு பம்பரம் போல் சுழன்றால் எப்படி இருக்கும்? பருவகாலங்களே இருக்காது. பூமத்திய ரேகைக்கு அருகே உள்ள நாடுகள் எப்போதும் வெப்பமாகவும், பூமத்திய ரேகையை விட்டு விலகி உள்ள நாடுகள் எப்போதும் உறைபனியாகவுமே இருக்கும். பூமி சாய்வாக சுற்றுவதால் எவ்வளவு சாதகம் பார்த்தீர்களா?

சூரிய மண்டலத்தை விட்டு எத்தனையோ ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருந்த சாட்ராஸ் என்ற ஒரு சூரிய நட்சத்திரத்தின் விண்வெளிப் பாதையில் ஆறாவது இடத்தில் சுற்றிக் கொண்டிருந்தது

சோல்ட்ரான் கிரகம்.

கிட்டத்தட்ட நம்முடைய பூமியைப் போன்ற கிரகம். சின்னச் சின்ன வித்தியாசங்கள் மட்டும் இருந்தன. அதன் சூரிய ஒளி மெலிதான பச்சை நிறத்தில் இருந்தது. மரங்கள் மிகக் குட்டையாகவும், செம்பழுப்பு நிறத்திலும் தெரிய, மக்கள் வசிக்கும் வீடுகள் கோழி முட்டை வடிவத்தில் இருந்தன. நல்ல உயரத்தில் சந்தோஷமான முகங்களோடு சாலைகளில் மக்கள் பார்வைக்குக் கிடைத்தார்கள். காற்றில் மிதப்பது போல் நடந்தார்கள்.

அல்ட்ரா சோனிக் வேகத்தில் பறந்த அந்த அழகான - மிதக்கும் கார் மாதிரியான - வாகனத்தில் தலைக் கவசங்களோடு இரண்டு பேர் உட்கார்ந்திருந்தார்கள். கவசத்தின் இரண்டு பக்கங்களிலும் ஆன்டெனாக்கள் தங்கத்தில் பளபளத்தன. அந்த இரண்டு பேரும் வாகனத்தில் பயணித்துக் கொண்டே சின்னச் சின்ன வார்த்தைகளாகப் பேசிக் கொண்டார்கள்.

“இன்று தலைமை விண்வெளி நிலையம் விடுமுறை.”

“இருந்தாலும் அதிபர் அழைத்து இருக்கிறார்.”

“செய்தி என்னவாக இருக்கும்?”

“அதுதான் எனக்குக் குழப்பம்.”

“ஒன்று மட்டும் தெரிகிறது. செய்தி முக்கியம். அதி முக்கியம்!”

கார் வேகமாய்ப் பயணித்தது. அந்தப் பெரிய - ஃபைபரினால் உருவான - மாளிகைக்கு முன்பாய்ப் போய் நின்றது.

உலோகக் கவசம் அணிந்த செக்யூரிட்டிகள் உடனே காரை வந்து மொய்த்து சோதனையிட்ட பின் கட்டடத்திற்கு உள்ளே போக அனுமதி கொடுத்தார்கள்.

சீரான வேகத்தில் புல்வெளி போன்ற பரப்பளவுக்கு இடையில் கார் பயணித்து அதிபரின் அறை வாசலில் நின்றது.

இருவரும் வாகனத்தை விட்டு இறங்கிச் சாத்தியிருந்த கதவுக்கு முன்பாய் நின்று தங்களிடம் இருந்த அடையாள உலோக அட்டைகளை சென்சார் கருவிக்கு முன்பாய்க் காட்டினார்கள்.

அந்தப் பெரிய கனமான மெட்டாலிக் கதவு சிக்கனமாய்த் திறந்து குறுகிய இடைவெளியைக் காட்டி... இருவரையும் உள்ளே

அனுமதித்தது.

சதுரமான விஸ்தாரமான அறை. குளிர்ச்சியான சூழ்நிலை. உயரமான இருக்கையில் அதிபர் உடனே பார்வைக்குக் கிடைத்தார். தன்னுடைய 200 கிலோ உடம்பை ஒரு உலோக ஆடைக்குள் திணித்து இருந்தார். தலையில் இருந்த அவருடைய கவசம் முள் முள்ளாய் நீட்டிக் கொண்டிருந்தது.

இருவரும் தலை வணங்கினார்கள்.

“அதிபர்க்கு வணக்கம்.”

அதிபர் தன் பச்சைநிற விழிகளால் இருவரையும் ஏறிட்டார்.

“ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்களைச் சோதனைக்கு உட்படுத்தித் தேர்வு செய்து பார்த்ததில் நீங்கள் இருவர் மட்டுமே ஒரு மாபெரும் விண்வெளிப் பயணத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளீர்கள். அஸ்ரா, லியோ...!”

அஸ்ரா, லியோ என்னும் பெயர்களைக் கொண்ட அந்த இரண்டு பேரும் விழிகளில் சந்தோஷம் மின்னப் பார்த்துக் கொண்டார்கள். இருவரும் ஒரே குரலில் சொன்னார்கள்.

“இப்படியொரு அரிதான வாய்ப்பை நாங்கள் எதிர்பார்க்கவில்லை அதிபரே…!”

அதிபர் தன் தங்க நிறப் பற்களைக் காட்டிச் சிரித்தார்.

“இருவரும் அவசரப்பட்டு சந்தோஷம் கொள்ளாதீர்கள். இது ஒரு அரிதான பயணம் என்பது உண்மை தான். ஆனால் உங்கள் உயிருக்கு உத்தரவாதம் இல்லாத பயணம். நமது சோல்ட்ரான் கிரகத்தைப் போலவே 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருக்கும் சூரியன் என்ற ஒரு நட்சத்திரத்தை மையமாக வைத்துச் சில கிரகங்கள் சுற்றி வருகின்றன. அதில் ஒரு கிரகம் பூமி என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. அந்தப் பூமி கிரகத்திற்குத்தான் நீங்கள் இருவரும் செல்லப் போகிறீர்கள்.

“இது ஒரு ரகசியமான பயணத் திட்டம் என்பதால்... நமது விண்வெளித் துறையில் உள்ள சில முக்கியமான அதிபர்களுக்கு மட்டுமே தெரியும். உங்களுடைய பயணம் வெற்றிகரமாய் முடிந்த பின்புதான் நம்முடைய ஊடகங் களுக்குத் தெரியப்படுத்த முடியும்.”

அதிபர் சொல்லச் சொல்ல அஸ்ரா, லியோ இருவரின் பச்சை நிற

விழிகளிலும் ஒரு பயம் பரவியது.

“வான மண்டலத்தின் ஏதோ ஒரு மூலையில் இருக்கும் பூமி கிரகத்திற்கு நாங்கள் எதற்காகச் செல்ல வேண்டும்?”

அதிபர் எழுந்தார்.

“வாருங்கள்... என்னோடு!” சொல்லிவிட்டு அவர் நடக்க ஆரம்பித்துவிட - அஸ்ரா, லியோ இருவரும் அவரைத் தொடர்ந்து பக்கத்தில் இருந்த ஒரு அறைக்குள் நுழைந்தார்கள்.

அறையின் சுவரில் ஒரு பெரிய மானிட்டர் திரை நீள் செவ்வகமாய்த் தெரிய, அதிபர் தன் கையில் வைத்து இருந்த ஒரு கருவியை இயக்க, மானிட்டர் திரை மெல்ல மெல்ல நிறம் நிறமாய் மாறி பின் இருண்டது.

அடுத்த சில விநாடிகளில் திரையில் ஒரு விண்வெளி மண்டலம் உருவாயிற்று. வெளிச்சமான நீள்வட்டப் பாதைகள். பிரபஞ்ச இருட்டில் ஆங்காங்கே நட்சத்திரங்கள் சுடர் விட்டன.

“அஸ்ரா…! லியோ...! இருவரும் உன்னிப்பாய்க் கவனியுங்கள். இந்தப் பிரம்மாண்டமான பால்வெளி மண்டலத்தில் ஒரு பச்சைப் புள்ளியாய்த் தெரிவது தான் நம்முடைய சோல்ட்ரான் கிரகம். அதிலிருந்து ஒரு மெல்லிய ஒளிக்கோடு உற்பத்தியாகி வடகிழக்கு மூலையை நோக்கிப் போவது தெரிகிறதா?”

“தெரிகிறது.”

“அந்த ஒளிக்கோடு ஒரு வெளிச்சப் புள்ளியில் போய் முடிவதும் தெரிகிறதா?”

“தெரிகிறது!”

“அந்த வெளிச்சப் புள்ளிதான் சூரியன்… அந்தச் சூரியனைச் சுற்றி வரும் கிரகங்கள் மொத்தம் ஒன்பது. இந்த ஒன்பது கிரகங்களும் ‘எலிப்ஸ்’ என்னும் சாய்வான கோணத்தில் சுருள் வட்டச் சுற்றாக சுற்றி வருகின்றன. அந்தக் கிரகங்களில் ஒன்றான பூமி கிரகத்துக்குத்தான் நீங்கள் இருவரும் செல்லப் போகிறீர்கள்.”

“இந்தப் பயணம் குறித்து உங்களுக்கு விரிவாகச் சொல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் ஒன்று மட்டும் உறுதி. இது ஒரு பிரபஞ்சத்தைத் தாண்டிய பயணம் என்றாலும் பாதுகாப்பான பயணம்.”

அஸ்ரா குறுக்கிட்டு கேட்டான்: “ஒரு பிரபஞ்சத்தைத் தாண்டிய விண்வெளிப் பயணத்துக்குள் என்னையும் லியோவையும் தேர்ந்தெடுத்தது குறித்து ஒரு புறம் மகிழ்ச்சியைக் கொடுத்தாலும் எதற்காக இந்தப் பயணம் என்பதை அறிந்து கொள்ள மனம் ஆர்வப்படுகிறது. காரணத்தைச் சொல்ல முடியுமா?”

“கண்டிப்பாய்! நம்மைப் போன்ற மனிதர்கள் இந்தப் பிரபஞ்சத்தின் ஏதாவது ஒரு மூலையில் ஏதாவது ஒரு கிரகத்தில் இருப்பார்கள் என்ற எண்ணத்தின் அடிப் படையில் நாம் செய்த ஆராய்ச்சிகளின் விளைவு - இப்போது அந்தக் கேள்விக்கான பதில் கிடைத்துவிட்டது.”

“115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் உள்ள சூரிய நட்சத்திரத்தின் கட்டுப்பாட்டில் உள்ள பூமி என்னும் கோளில்தான் நம்மைப் போன்ற மனிதர்கள் உள்ளார்கள். அவர்களுக்கும் நமக்கும் உருவ அமைப்பில் சின்னச் சின்ன வேறுபாடுகள். இப்போது பூமியின் ஜனத்தொகை 500 கோடிக்கு மேல் உள்ளது. எலெக்ட்ரான் கதிர் வீச்சுகளை வைத்துப் பார்க்கும்போது நம்மைப் போலவே அவர்களும் புத்திசாலிகளாய் இருக்கக்கூடும் என்பதை நம் விண்ணியல் வல்லுநர்கள் கணித்திருக்கிறார்கள்.

“இனி உங்கள் கேள்விக்கு வருவோம். நீங்கள் இருவரும் என்ன காரணத்திற்காகப் பூமிக்குச் செல்ல வேண்டும்? இந்தக் கேள்விக்கான பதில் மிகவும் சுலபம். இப்போது மானிட்டரைப் பாருங்கள்.”

அஸ்ரா, லியோ இருவரும் தங்களுடைய பார்வைகளை அந்த மானிட்டரின் திரைக்குக் கொண்டு போனார்கள்.

அதிபர் தன் கையில் வைத்து இருந்த கருவியின் பட்டனைத் தட்ட மானிட்டரில் விண்வெளி மண்டலம் க்ளோஸப்பில் பெரிதாகி - சூரியப் புள்ளி பெரிதாகி நெருப்புக் கோளமாய் பிரம்மாண்டமாய்த் தெரிந்தது.

“இதுதான் சூரியன் என்கிற அந்த நட்சத்திரம். இது திட நிலையில் இல்லாத ஒரு வாயுக் கோளம். இந்தச் சூரியன் என்னும் நட்சத்திரம் தன்னைத் தானே எரித்துக் கொண்டு வெப்பத்தையும் வெளிச்சத்தையும் வெளியிடுகின்றது. பூமியில் மட்டும் உயிரினங்கள் தோன்றவும், அந்த உயிரினங்கள் உயிர் வாழவும் அங்கு நிலவும் தட்ப வெப்ப நிலையும், சூரிய ஒளியிலிருந்து பெறப்படும் வெப்பமும் காரணம். இதன் காரணமாய் பூமியில் ஒரு பரிணாம வளர்ச்சி ஏற்பட்டு மனிதன் உருவானான். சென்ற ஒரு வருட காலமாய் பூமி நமக்குப் பாதகமும் அல்லாத சாதகமும் அல்லாத ஒரு சாதாரண கிரகமாய் இருந்தது. ஆனால் இன்றைக்கு நிலைமை வேறு!”

“வேறு என்றால்...?”

“இன்றைக்குப் பாதகம்!”

“எப்படி...?”

“பூமியின் ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து நம்முடைய கிரகத்தின் விண்ணியல் துறைக்கு இடைவிடாமல் ஒரு கதிர்வீச்சு வந்து கொண்டு இருக்கிறது. அது எந்த இடம் என்பதையும், அங்கே ஒரு மனிதன் இருக்கிறான் என்பதையும் போன மாதம்தான் கண்டுபிடித்தோம்.”

“அந்த இடம் இந்தியா என்பதும், இந்தியாவின் தெற்குப் பகுதியில் இருக்கும் தமிழ்நாடு என்பதும், தமிழ் நாட்டில் கன்னியாகுமரி என்னும் இடத்தில் உள்ள ‘அக்னிப் புழுதி’ கிராமம் என்பதும், அந்தக் கிராமத்தில் உள்ள ஒரு பெரிய பழங்கால வீடு என்பதும் தெரிய வந்தது. இதோ! இதுதான் அந்தப் பழங்கால வீடு!”

அதிபர் கருவியை இயக்க, மானிட்டர் திரையில் மங்கலாய் ஒரு பெரிய பழைய வீடு தூண்களோடு தெரிந்தது.

“இந்த வீட்டிலிருந்துதான் ஒரு கதிர்வீச்சு நம்முடைய விண்ணியல் துறைக்கு வந்து கொண்டிருக்கிறது. இது ஒரு எலக்ட்ரான் கதிர்வீச்சு. நம்முடைய சோல்ட்ரான் கிரகத்துக்கு மேல் ஒரு கனத்த இரும்புத் தகட்டைப் போல் இருக்கும் ஓசோன் படலத்தையும் துளைத்துக் கொண்டு அந்த எலக்ட்ரான் கதிர்வீச்சு வருகிறது என்றால், அது ஒரு ஆபத்துக்குரிய விஷயம். இதை நாம் ஆரம்பத்திலேயே தவிர்க்க வேண்டும்.

“இந்தப் பணியைத்தான் நீங்கள் செய்யப் போகி றிர்கள். அடுத்த சில மணி நேரங்களுக்குள் நீங்கள் பூமி கிரகத்துக்குப் புறப்படத் தயாராக வேண்டும். உங்களுக்காக நமது விண்ணியல் விஞ்ஞானிகள் ஒரு அதிவேக விண்கலத்தை உருவாக்கியிருக்கிறார்கள். இங்கிருந்து இடை விடாத ஆறுமாதப் பயணம் - பூமிக் கிரகத்தில் நீங்கள் இறங்கி விடலாம்.

“உங்களுடைய விண்கலத்தை ஒரு அடர்ந்த காட்டுப் பகுதியில் மறைத்து வைத்துவிட்டு அந்தப் பழங்கால வீட்டைக் கண்காணிக்க வேண்டும். அந்த வீட்டிலிருந்து நம்முடைய சோல்ட்ரான் கிரகத்திற்கு எப்படி அந்த எலக்ட்ரான் கதிர் வருகிறது... அதற்குக் காரணம் யார் என்பதையும் கண்டுபிடித்து தகவல் அனுப்ப வேண்டும். உங்களால் இந்தப் பணியை நிறைவேற்ற முடியும் என்று நான் நினைத்துத் தேர்வு செய்துள்ளேன். உங்களால் முடியாது என்றால் இப்போதே

சொல்லிவிடுங்கள்.”

அஸ்ரா, லியோ இருவரும் ஒரே நேரத்தில் குறுக்கிட்டார்கள்.

“எங்களால் முடியும்.”

“உங்களுடைய உறுதியான பதில் எனக்கு மிகுந்த மகிழ்வைக் கொடுக்கிறது. இது ஒரு ஆபத்தான பணி. விண்ணியல் துறையில் பட்டம் பெற்ற நீங்கள் இதை வெற்றிகரமாய்ச் செய்து முடிப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இருந்தாலும் ஒரு எச்சரிக்கை.”

“என்ன...?”

“பூமியில் உள்ள மனிதர்கள் ஆபத்தானவர்கள். அவர்கள் உங்களைக் கண்டுபிடித்து விடாதபடி உளவு வேலையைப் பார்க்க வேண்டும். அவர்களிடம் நீங்கள் மாட்டிக் கொண்டால் அதற்குப் பிறகு நம்முடைய கிரகத்திற்கு நீங்கள் திரும்ப முடியாது. பூமியில் உள்ள விண்ணியல் மியூஸியத்தில் காலம் பூராவும் அடைபட்டுக் கிடக்க வேண்டியதுதான்.”

அஸ்ரா, லியோ இருவரின் முகங்களிலும் மெலிதாய் ஒரு பயம் பரவியது. அவர்களின் உடம்புக்குள் இருந்த ஊதா நிற ரத்தம் வேகமாய்ப் பாய ஆரம்பித்தது.

***

# 2

18-வது நூற்றாண்டில் இருந்த விஞ்ஞானிகள் கண்டுபிடித்த ஒரு அறிவியல் உண்மையை இப்போது பார்ப்போம். பூமியில் இருக்கும் எல்லாத் தனிமங்களிலும் எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான் என்ற நுட்பமான மூன்று துகள்கள் மட்டுமே உள்ளன என்று விஞ்ஞான உலகத்தை வியக்க வைத்தார்கள். ஆனால் 1932-ம் ஆண்டு அமெரிக்க அறிவியல் விஞ்ஞானி ஒருவர் ‘பாஸ்ட்ரான்’ என்ற துகளைக் கண்டுபிடித்தார். இந்த பாஸ்ட்ரான் துகள் விண்வெளியிலிருந்து வரும் ‘காஸ்மிக்’ கதிர்களில் இருப்பதை உலக விஞ்ஞானிகளுக்கு நிரூபித்தார். இந்த நான்கு துகள்கள் மட்டும்தான் இருக்கிறதா, இல்லை. இன்னும் ஏதாவது இருக்கிறதாவென்று மற்ற விஞ்ஞானிகள் முழுமூச்சாய் ஆராய்ந்தனர்.

விளைவு, ‘மீயூஸான்’ என்ற துகள் பிடிபட்டது. 1956-ல் மேலும் ஒரு

துகள் பிடிபட்டது. அதன் பெயர் ந்யூட்ரினோ. இந்த 6 துகள்கள்தான் என்று எண்ணி ஆராய்ச்சியை முடித்துக் கொள்ள விஞ்ஞானிகள் நினைத்தபோது, இளம் விஞ்ஞானிகள் இந்தத் துகள் தேடும் ஆராய்ச்சியைத் தொடர்ந்து மேற்கொண்டதில் 50க்கும் மேற்பட்ட துகள்கள் மாட்டின. பிறகு அவை 100 என்ற எண்ணிக்கையை நோக்கிப் போக, களைத்துப் போன விஞ்ஞானிகள் எல்லாத் துகள்களையும் மூன்று வகையாகப் பிரித்து பேரியான், மேஸான், லெப்டான் என்று பெயரிட்டு ஒருவழியாய் பிரச்சனையை முடித்துக் கொண்டனர், ஆனால் சில நாட்களிலேயே அந்தப் பிரச்சனை விஸ்வரூபம் எடுத்தது.

'ஸ்லிப் ராக்' ஃபாரஸ்டின் மையப் பகுதி.

சுற்றிலும் வான்நோக்கி உயர்ந்த மரங்கள். சரியாய் நள்ளிரவு நேரம்.

வனத்துறைக்குச் சொந்தமான கெஸ்ட் ஹவுஸ் இருட்டில் இருக்க, ஒரே ஒரு அறையில் மட்டும் வெளிச்சம் சோகையாய்த் தெரிந்தது. வெளியே கானகக் காற்றில் குளிர். ஆர்க்கியாலஜி சம்பந்தப்பட்ட புத்தகம் ஒன்றை முழு மூச்சாய்ப் படித்துக் கொண்டிருந்த ராஜவேலு, கெஸ்ட் ஹவுஸுக்குள் ஜீப் ஒன்று மெலிதான உறுமலோடு நுழைவதைப் பார்த்ததும் புத்தகத்தினின்றும் பார்வையை உயர்த்தினார்.

படித்துக் கொண்டிருந்த புத்தகத்தை அப்படியே மேஜையின் மீது கவிழ்த்து வைத்த ராஜவேலுவுக்கு எழுபது வயது இருக்கலாம். ஒடிசலான உடம்பு. எலும்பு தட்டிப் போன நீள் வட்ட முகம். முன் மண்டையில் ரோமம் கொட்டிப் போயிருந்தாலும் பின் மண்டையில் வெள்ளை ரோமம் பாக்கியிருந்தது.

ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்டில் முப்பது வருஷ காலம் பணி புரிந்து ஓய்வு பெற்றுவிட்ட போதிலும் அரசாங்கம் இன்னமும் அவரை ஆர்க்கியாலஜி சம்பந்தப்பட்ட பணிகளுக்காக அவ்வப்போது சிறப்பு அழைப்பு கொடுத்து பயன்படுத்திக் கொண்டு வருகிறது.

ராஜவேலு அறையிலிருந்து வெளியே வந்தார். கெஸ்ட் ஹவுஸுக்கு வெளியே மெலிதான இருட்டில் அந்த ஜீப் நின்றிருக்க... மார்க்கண்டேயன் சால்வையால் உடம்பைப் போர்த்திக் கொண்டு கீழே இறங்கினார்.

மார்க்கண்டேயனுக்கு எழுபது வயது இருக்கலாம். ஆனால் தளர்ச்சி அடையாத உடம்போடு நல்ல உயரத்தில் இருந்தார். மேல் உதட்டில் வளைந்த மீசையும் தாடையில் ஒரு சின்னக் கொத்தாய் பிரெஞ்சு

தாடியும் தெரிந்தது. கடந்த நாற்பது வருடங்களாக டி.என்.ஏ. ஆராய்ச்சியில் பெரும்பாலான நேரத்தைச் செலவழித்துக் கொண்டு இருப்பவர்.

ராஜவேலு மார்க்கண்டேயனை நெருங்கினார். குரலைத் தாழ்த்திக் கொண்டு கேட்டார்.

"நீங்களே ஜீப்பை ஒட்டிட்டு வந்தீங்க போலிருக்கு?"

"ஆமா…! விஷயம் ரொம்பவும் முக்கியமானது. நீங்க மட்டும் தனியா வாங்கன்னு சொன்னதால நானே ஜீப்பை எடுத்துட்டு வந்தேன். என்ன விஷயம் ராஜவேலு...?"

"உங்களுக்குப் பயன்படப் போகிற விஷயம் வாங்க... உள்ளே போய்ப் பேசலாம்…!"

இருவரும் அறைக்குள் நுழைந்தார்கள். கதவு சாத்தப்பட்டது. மேஜைக்கு இருபுறமும் இருந்த நாற்காலிகளில் போய் உட்கார்ந்தார்கள்.

"கொஞ்சம் டீ சாப்பிடலாமா, மார்க்கண்டேயன்?"

"வேண்டாம்… இந்த அகால வேளையில் எது சாப்பிட்டாலும் என்னோட வயித்துக்கு ஒத்துக்கறது இல்லை. ராத்திரி ஒன்பது மணிக்கு டின்னரை முடிச்சுகிட்டா அடுத்த நாள் காலையில் எட்டு மணிக்குத்தான் பிரேக் - ஃபாஸ்ட்."

ராஜவேலு சிரித்தார்.

"நல்ல உணவுப் பழக்கம்தான்! பட் என்னாலே அதைக் கடைபிடிக்க முடியலை… நான் முழிச்சுட்டு இருக்கிற நேரத்துல ரெண்டு மணி நேரத்துக்கு ஒரு தடவை அரை கப் டீயாவது என்னோட வயித்துக்குள்ளே போயாகணும்."

சொன்ன ராஜவேலு சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு மெல்லிய குரலில் கேட்டார்.

"இந்த ராத்திரி வேளையில் உங்களை வரச் சொன்னதுக்கு என்ன காரணம் இருக்க முடியும்னு நினைக்கறீங்க, மார்க்கண்டேயன்?"

"ஸாரி...! என்னால கெஸ் பண்ண முடியலை. பட் இது யார்க்கும் தெரியக்கூடாத விஷயம் என்கிற ஒரு விஷயம் மட்டும் தெரியுது!"

"ஓ.கே... இப்ப... அது என்னான்னு பார்த்துடலாம்..."

சொன்ன ராஜவேலு எழுந்து போய் சுவரோரமாய் இருந்த பீரோவைத் திறந்து பாலிதீன் கவரால் சுற்றப்பட்ட அந்தச் சிறிய மூட்டையை எடுத்து வந்து மேஜையின் மீது வைத்து அதன் மேல் கட்டியிருந்த கயிற்றின் முடிச்சை அவிழ்த்தார்.

அவர் அதை அவிழ்த்துக் கொண்டிருக்கும் போதே சுற்றிலும் இருந்த காற்று லேசாய் நாறியது.

“என்ன இது...?”

“நான் சொல்ல மாட்டேன்... பார்த்துட்டு நீங்கதான் சொல்லணும்!”

பாலிதீன் கவர் பிரிபட்டது.

உள்ளேயிருந்த - மண் அப்பியிருந்த - ஒரு அடி நீளம் இருந்த மூன்று குச்சி போன்ற அமைப்புகளையும், அரையடி நீளம் இருந்த இரண்டு குச்சிகளையும் எடுத்து வைத்தார்.

காற்றில் இப்போது மூக்குக்குப் பிடிக்காத நாற்றம்.

மார்க்கண்டேயன் அவைகளை உற்றுப் பார்த்தார்.

“என்ன இது...?”

ராஜவேலு புன்முறுவல் பூத்தார்.

“இது உண்மையாவே என்னான்னு உங்களுக்குத் தெரியலையா மார்க்கண்டேயன்?”

“தெரியலையே...!”

“கையில் எடுத்துப் பாருங்க...!”

அவர் தயங்கினார்.

“என்ன தயக்கம்...? ம்… கையில் எடுத்துப் பாருங்க…”

மார்க்கண்டேயன் குச்சி குச்சியாய் இருந்த அந்த நீளமான ஐந்து பொருள்களையும் கையில் எடுத்தார். பார்ப்பதற்குக் கல் போன்ற தோற்றத்தைக் கொடுத்தாலும் அந்த ஐந்துமே எடையற்றதாய் இருந்தது. அதையே புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

ராஜவேலு கேட்டார்.

“இது என்னவாய் இருக்கும்னு உங்களால கெஸ் பண்ண முடியுதா...?”

“ஸாரி முடியலை...”

“எனி கெஸ் ஒர்க்...?”

மார்க்கண்டேயன் தீர்க்கமாய்த் தலையாட்டினார்.

“நோ ஐடியா...”

“இட்ஸ் ஓகே...! நானே சொல்லிடறேன். இது ஒரு மனிதனோட கைவிரல் எலும்புகள்...”

மார்க்கண்டேயன் முகத்தில் திகைப்பு.

“என்ன சொல்றீங்க ராஜவேலு. ஒரு மனிதனோட கைவிரல் எலும்புகள் மூன்று அங்குலத்துக்கு மேல் இருக்காது. இந்த எலும்புகளின் நீளம் கிட்டதட்ட ஒரு அடி இருக்கும் போலிருக்கே?”

“எஸ்…! இது ஒரு மனிதனோட கைவிரல் எலும்புகள்தான். ஒரு அடி நீளமுள்ள இந்த மூணு விரல்களும், நடு விரல், மோதிர விரல், ஆட்காட்டி விரல். நீளம் சற்றுக் குறைவாய் இருக்கிற இந்த இரண்டு எலும்புகளில் ஒன்று சுண்டு விரல். இன்னொன்று கட்டை விரல்…!”

“மை குட்னஸ்…! இது எப்படி உங்களுக்குக் கிடைச்சது...?”

ராஜவேலு அந்தக் கைவிரல் எலும்புகளை மேஜையின் ஒரு ஓரமாய்த் தள்ளி வைத்து விட்டுச் சொன்னார்.

“மார்க்கண்டேயன்...! நான் ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்டிலிருந்து ரிடையராயிட்ட போதிலும் அரசாங்கம் என்னை விடறதாய் இல்லை. ஏதாவது ஒரு ப்ராஜக்ட்டைக் குடுத்து ஒரு காட்டுப் பகுதிக்கோ, மலைப் பகுதிக்கோ, போய் அகழ்வாராய்ச்சி பண்ணி அந்த இடத்துல எது மாதிரியான தாதுப்பொருள்கள் கிடைக்க வாய்ப்பு இருக்குன்னு ரிப்போர்ட் கொடுக்கச் சொல்றாங்க...

“அதே மாதிரிதான் ரெண்டு வாரத்துக்கு முந்தி இந்த ‘ஸ்லிப் ராக்’ காட்டுப் பகுதிக்கு அரசாங்கம் ஒரு ப்ராஜக்ட் விஷயமாய் என்னை அனுப்பி வெச்சாங்க. இந்தக் காட்டில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் சில அபூர்வமான ஸ்படிகங்கள் கிடைக்கிறதாய் யாரோ ஒருத்தர் ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்டுக்கு லெட்டர் எழுதிப் போட, அதுல உண்மை இருக்குமான்னு தெரிஞ்சுக்கிறதுக்காக ஒரு ப்ராஜக்ட்டை உருவாக்கி என்னோட தலைமையில் ஒரு பத்து பேரை அனுப்பிட்டாங்க…”

“இந்தக் காட்டில் இருட்டுப் பள்ளம்னு ஒரு இடம் இருக்கு. இந்த கெஸ்ட் ஹவுஸிலிருந்து சுமார் ரெண்டு கிலோ மீட்டர் தூரம் உள்ளே போகணும். இன்னிக்குச் சாயந்தரம் அந்த இடத்தின் ஒரு பகுதியில் தோண்டிகிட்டு இருக்கும்போதுதான் இந்த அஞ்சு கைவிரல்களும் என்னோட பார்வைக்குப் பட்டது. நான் அதை மொதல்ல பார்த்தபோது பாறையிலிருந்து உரிந்து போன நீலநிற கற்களாய் இருக்கும்னு நினைச்சேன்.

“அதைக் கையில் எடுக்கும்போது ஒரு ஸ்மெல் வந்தது. பொதுவாய் மனித உடம்பில் இருக்கிற செல்கள் ‘டீ-கம்போஸ்’ ஆகும் போதுதான் அது மாதிரியான ஸ்மெல் வரும். அதுக்குப் பிறகு அதை உன்னிப்பாய்ப் பார்த்தபோதுதான் ஒரு மனிதனின் கைவிரல் எலும்புகள் மாதிரி இருந்தது.”

மார்க்கண்டேயன் குறுக்கிட்டார்.

“இது ஏன் ஒரு பெரிய பிராணியோட கைவிரல் எலும்புகளாய் இருக்கக்கூடாது...?”

“அப்படியிருக்க சாத்தியம் இல்லை மார்க்கண்டேயன் மனிதன் ஒருவனுக்குத்தான் இப்படிப்பட்ட நேர்த்தியான விரல் அமைப்பு இருக்கும். இது எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு புதைக்கப்பட்ட ஒரு மனிதனின் உடலாக இருக்க வாய்ப்பு அதிகம் என்று நினைக்கிறேன். நீங்க டி.என்.ஏ. சம்பந்தப்பட்ட ஒரு ஆராய்ச்சியாளர். இதைப் பற்றி அரசாங்கத்திற்குத் தெரிவிக்கிறதுக்கு முந்தி உங்ககிட்ட கன்சல்ட் பண்ணிடலாம்னுதான் யார்க்கும் தெரியாம இந்த ராத்திரி வேளையில் உங்களுக்குத் தகவல் கொடுத்தேன். நீங்களும் உடனே புறப்பட்டு வந்துட்டீங்க…”

“டி.என்.ஏ. ஆராய்ச்சியில் நீங்க மருத்துவரீதியான ஏதாவது ஒரு புது உண்மையைச் சொல்லி சர்வதேச டி.என்.ஏ. விஞ்ஞானிகளை ஆச்சர்யப்பட வைக்கணும் அந்த உண்மையை அடிப்படையாய் வெச்சு நோபல் பரிச மாதிரியான ஒரு விருது வாங்கணும்னு சொல்லிட்டு இருப்பீங்க. அந்த முயற்சிக்கு உதவத்தான் நான் இந்தத் தகவலை உங்களுக்குத் தெரியப்படுத்தினேன்.”

“தேங்க் யூ... ராஜவேலு…! இது மட்டும் மனித விரல்களாய் இருந்துட்டா டி.என்.ஏ. ஆராய்ச்சியில் ஒரு சில புதிய உண்மைகளை மருத்துவ உலகத்துக்குக் கொண்டு வந்து பிரமிக்க வைப்பேன். பை… த... பை… இந்தக் கைவிரல் எலும்புகள் கண்டுபிடிக்கப்பட்ட விஷயம் உங்க ஆர்க்கியாலஜி குழுவில் இருக்கிற யார்க்கும் தெரியாதே?”

“தெரியாது…! பத்தடி ஆழத்தில் மண்ணோடு மண்ணாய்ப் பிசைந்து கிடந்த இந்த எலும்புகளை நான் பார்த்ததோ. அதை எடுத்துப் பத்திரப்படுத்திக் கொண்டதோ குழுவில் உள்ள யார்க்கும் தெரியாது...! இந்த எலும்புகளை நீங்க உங்க எக்ஸ்பெரிமென்டல் லேபுக்குக் கொண்டுபோய் இது மனிதனோட கைவிரல் எலும்புகள்தானா. இல்லை, வேறு ஏதாவதான்னு கண்டுபிடிங்க?

“ஓ.கே. ராஜவேலு! அதுக்கு முன்னாடி எனக்கு ஒரு உண்மை தெரியணும்!”

“என்ன...?”

“நீங்க இந்த எலும்புகளைக் கண்டெடுத்த இடத்தில் வேற ஏதாவது இருந்ததா...?”

“இல்லை…! இந்த எலும்புகளை நான் பார்த்த போது மணி சாயந்தரம் ஐந்து மணி. காட்டுப்பகுதி சீக்கிரமாய் இருட்டி விட்டதால தோண்டறதை நிறுத்திட்டோம்…!”

மார்க்கண்டேயன் ஏதோ யோசனையில் இருக்க - ராஜவேலு அவருடைய தோளைத் தொட்டார்.

“என்ன பேச்சையே காணோம்?”

“ராஜவேலு! நீங்க எனக்காக ஒரு உதவி பண்ணணும்.”

“என்ன சொல்லுங்க...!”

“ஒரு ரெண்டு நாளைக்கு அந்த இடத்துல அகழ் வாராய்ச்சியை நிறுத்தி வையுங்க...!”

“காரணம்…?”

“நாளைக்கு அந்த இடத்துக்கு நாம ரெண்டு பேர் மட்டும்தான் போகப் போறோம். மேற்கொண்டு வேற ஏதாவது எலும்புகள், மண்டையோடு கிடைக்கிறதாவென்று அந்த இடத்தைத் தோண்டிப் பார்க்கப் போறோம். ஏன்னா இந்த விஷயம் வெளியே கசிஞ்சா. உடனே மீடியாவுக்குப் போயிடும். மீடியாவுக்குப் போனா எந்த ஒரு விஷயமும் ரெண்டு நாளைக்குள்ளே சீப்பாயிடும். இது சர்வ ஜாக்கிரதையாய் காக்கப்பட வேண்டிய விஷயம்…!”

“யூ… மே… பி… கரெக்ட் மார்க்கண்டேயன்! ஆனா ரெண்டு நாளைக்கு அகழ்வாராய்ச்சியை நிறுத்தி வெச்சா இந்தக் குழுவில்

இருக்கிற பத்து பேரும் என்ன காரணம்னு கேட்பாங்களே...?”

“காரணம் வெரி சிம்பிள்!”

“என்ன...?”

“ரெண்டு நாளைக்கு உடம்பு சரியில்லைன்னு சொல்லிடுங்க. அவங்களுக்குத் தெரியாம ஸ்பாட்டுக்கு போயிடுவோம்!”

“நான் கெஸ்ட் ஹவுஸ் ரூம்ல இல்லாததை அவங்க கண்டுபிடிச்சுடுவாங்களே...?”

“பகல் நேர்த்தில் போனாத்தானே கண்டுபிடிப்பாங்க. ராத்திரியில் போயிடலாம்!”

ராஜவேலு திடுக்கிட்டார்.

“எ...எ... என்னது...! ராத்திரியில் அந்த இடத்துக்குப் போறதா...? என்ன. மார்க்கண்டேயன்... ஆர்... யூ... ஜோக்கிங்...?”

“இதுல ஜோக் அடிக்க என்ன இருக்கு ராஜவேலு...? ஒரு விஷயத்தை ரகசியமான முறையில் ஆய்வு செய்ய ணும்னா இது மாதிரியான பொய்களைத் தவிர்க்க முடியாது.”

“இருந்தாலும்... அந்த ராத்திரி வேளையில் நீங்களும் நானும் மட்டும் தனியாய்ப் போய்...”

“பயமாய் இருக்கா...? எதுக்குப் பயம்...? காட்டு விலங்குகள் கிட்டேயிருந்து பாதுகாத்துக்க என்கிட்டே லேசர் ஃபென்ஸிங் டார்ச் இருக்கு. பூமியைக் குடைந்து தோண்டி மண் எடுத்து வெளியே போட போர்ட்டபிள் டிக்கிங் மெஷின் என்னோட பிரத்யேக ஜீப்ல இருக்கு...”

“மிட் நைட் பன்னிரண்டு மணிக்குப் போனால் விடியற்காலை நாலு மணிக்குள்ளே திரும்பிடலாம். கைவிரல் எலும்புகள் கிடைச்ச இடத்துல கண்டிப்பாய் அந்த மனிதனின் மற்ற எலும்புகளும் மண்டையோடும் இருக்கும். அது நம்ம கைக்கு கிடைச்சா... வீ கேன் டூ வொண்டர்ஸ் இன் டி.என்.ஏ. ரிசர்ச்…!”

“எதுக்கும் யோசனை பண்ணி…”

“இதுல யோசனை பண்ண ஒண்ணுமேயில்லை ராஜவேலு…! நாளைக்கு ராத்திரி மிட் நைட் நாம அந்த ஸ்பாட்டுக்குப் போறோம். கைவிரல் எலும்புகள் இருந்த இடத்தைத் தோண்டறோம்!”

மார்க்கண்டேயன் சொல்ல - ராஜவேலு வாய் உலர்ந்து முகம் வெளுத்தார். இதயத்துடிப்பு தன்னுடைய எண்ணிக்கையை அதிகரித்தது.

***

# 3

அணுத் துகள்கள் அத்தனையையும் மூன்று வகையாகப் பிரித்து பேரியான். மேஸான், லெப்டான் என்று வபயரிட்டுப் பிரச்சனையை முடித்துக் கொண்டபின் அடுத்த சில நாட்களிலேயே இன்னொரு உண்மையையும் விஞ்ஞானிகள் கண்டுபிடித்துவிட்டார்கள். அது என்ன உண்மை தெரியுமோ...? அந்த மூன்று வகை அணுத்துகள்களிலும் ஒரு உப துகள் இருப்பதுதான். அணு என்பதே கண்ணால் பார்க்க முடியாத ஒன்று. அதற்குள் உப துகள் இருப்பது விஞ்ஞானிகளுக்கு அதிர்ச்சியைக் கொடுத்தாலும் நிதானமாய் எல்லாத் துகள்களையும் ஆராய்ந்து உப துகள்கள் எந்தெந்த அணுக்களில் இருக்கிறது என்கிற உண்மையையும் கண்டுபிடித்தார்கள். அந்த உய துகள்களுக்கு 'குவார்க்' என்று பெயர் வைத்தார்கள். எல்லாவற்றையும் வகைப்படுத்தி ‘மொத்தம் 12 துகள்களால்தான் இந்தப் பிரபஞ்சம் உருவாக்கப்பட்டு இருக்கிறது’ என்பதையும் தீர்மானமாகச் சொல்லிவிட்டார்கள். ஸோ... இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள எல்லாமே - சூரியன், சந்திரனிலிருந்து சுக்கு, மிளகு வரை இந்தத் துகள்களால் உருவானவை. இந்த 12 துகள்களுக்கும் எதிர் துகள்கள் இருப்பதால்தான் எல்லாமே இயங்கிக் கொண்டு இருக்கிறது.

உத்தம சோழன் அந்த ஹாஸ்பிடலின் என்கொய்ரி கௌண்ட்டரை நெருங்கி. கம்ப்யூட்டர் திரையில் கவனமாய் இருந்த அந்த அழகான பெண்ணை ஒரு எக்ஸ்கியூஸ் மீ சொல்லி மென்மையாய்க் கலைத்தான்.

உத்தமசோழன் ஒரு அழகான 27 வயது இளைஞன்.

அவள் நிமிர்ந்தாள்.

“எஸ்...”

“சைக்யாட்ரிஸ்ட்... டாக்டர் உதயபானுவைப் பார்க்கணும்.”

“கன்ஸல்டேஷனா?”

“ஆமா...”

“இதுதான் ஃபர்ஸ்ட் டைமா?”

“ஆமா…”

பெயரைக் கேட்டு எழுதிக் கொண்ட அவள் ஒரு போக்கனை எடுத்துக் கொடுத்தபடி சொன்னாள்.

“உங்களோட டோக்கன் நம்பர் ஃபைவ். அதோ அந்தப் பெரியவர் போனதும் நீங்க டாக்டரைப் பார்க்கப் போகலாம். கன்சல்டேஷன் ஃபீஸ் முந்நூறு ரூபாய்.”

டோக்கனை வாங்கிக் கொண்ட உத்தம சோழன், மூன்று நூறு ரூபாய் நோட்டுக்களை எடுத்துக் கொடுத்து வீட்டுச் சுவரோரமாய் போடப்பட்டிருந்த வரிசை நாற்காலிகளில் ஒன்றில் போய் உட்கார்ந்தான்.

எதிரே இருந்த சுவரில் சின்னச் சின்னதாய் அறிவிப்பு பலகைகள் தெரிய - பார்வை அதில் பதிந்தது.

‘நமக்கு பிறர் என்ன நல்லது செய்ய வேண்டும் என்று நாம் விரும்புகிறோமோ, அதைத்தான் நாமும் பிறர்க்குச் செய்ய வேண்டும்.

அதே போல் –

நமக்குப் பிறர் என்ன செய்யக் கூடாது என்று

நாம் விரும்புகிறோமோ அதை

நாம் பிறர்க்குச் செய்யக் கூடாது.’

உத்தம சோழனின் பார்வை இடது பக்கச் சுவரில் இருந்த இன்னொரு அறிவிப்புப் பலகைக்குப் போயிற்று.

குடும்பத்திலும் சரி, நீங்கள் வேலை பார்க்கும் இடத்திலும் சரி உறவுகள் சிறப்பாக இருக்க 'நானே பெரியவன். நானே உயர்ந்தவன்!’ என்ற இறுமாப்பை உங்கள் உள்ளத்திலிருந்து அகற்றி விடுங்கள்.

சந்தோஷம் என்பது பணத்தில் இல்லை, பழகும் பண்பில்தான் இருக்கிறது. புன்னகை செய்யவும், சிற்சில அன்புச் சொற்களைச் சொல்லவும் நேரம் இல்லாதது போல் நடந்து கொள்ளாதீர்கள்.

உத்தம சோழனின் பார்வை திரும்பிய பக்கமெல்லாம் அறிவிப்புப்

பலகைகள் சின்னதும் பெரியதுமாகத் தெரிய - அதில் எல்லாவற்றிலுமே இதமான அறிவுரைகள்.

ஒவ்வொன்றாய்ப் படித்து முடித்து ஏறக்குறைய ஒரு மணி நேரம் கழிந்த பின்புதான் அவனால் டாக்டர் உதயபானுவைப் பார்க்க முடிந்தது.

உதயபானு நடுத்தர வயதில் இருந்தாள். வயதைத் துல்லியமாய்க் கணிக்க முடியாத அளவுக்குத் தோற்றம். உயர்த்திப் போட்ட கொண்டையும், கண்களுக்குக் கொடுத்திருந்த வெள்ளி பிரேமிட்ட மெலிதான கண்ணாடியும், நெற்றியின் மையத்தில் இருந்த ஒரு சின்ன சிவப்பான ஸ்டிக்கர் பொட்டும் உதயபானுவின் தோற்றத்தை அழகாக்கிக் காட்டின.

“வணக்கம் டாக்டர்!”

“வணக்கம்... ப்ளிஸுு

உதயபானு எதிரிலிருந்த நாற்காலியைக் காட்ட உத்தம சோழன் உட்கார்ந்தான்.

“சொல்லுங்க! என்ன பிரச்சனை…?”

“டாக்டர் என்னோட பேர் உத்தம சோழன். எனக்குக் கொஞ்ச நாளாய் ஒரு பிரச்னை. அந்தப் பிரச்னை சம்பந்தமாய் உங்களோட கன்சல்டேஷன் வேணும்!”

“ஒரு நிமிஷம்.” கையமர்த்திய டாக்டர் உதயபானு ஒரு புன்னகையோடு கேட்டாள்.

“உங்க பேர் என்ன சொன்னீங்க?”

“உத்தம சோழன்.”

“இது ஏதோ சரித்திர காலப் பேராய் இருக்கு. இப்படி ஒரு பேர் வைக்க என்ன காரணம்...?”

“பெரிசா காரணம் எதுவும் கிடையாது. என்னோட அப்பா ஒரு ஹிஸ்டரி புரஃபசர். சோழ மன்னர்கள் பற்றிய ஒரு ஆராய்ச்சிப் புத்தகமும் எழுதியிருக்கார். சோழ மன்னர்கள் மேல் அப்பாவுக்கு ஒரு பற்றுதல் இருந்த காரணத்தினாலேயே எனக்கு இப்படியொரு பேர் வெச்சார் டாக்டர்.”

“சரி! உங்க பிரச்னை என்ன?”

உத்தமசோழன் சில விநாடிகள் தயங்கிவிட்டு மெல்லப் பேச்சை ஆரம்பித்தான்.

“டாக்டர்! என்னோட பிரச்னையை உங்ககிட்ட சொல்றதுக்கு முந்தி என்னோட மனசில் இருக்கிற சில சந்தேகங்களை உங்ககிட்டே கேட்கலாமா?”

“தாராளமாய்...!”

“இந்தப் பிரபஞ்சம், பால்வெளி மண்டலம், அண்டம், கோள்கள் இது பற்றி என்ன நினைக்கறீங்க...?”

“இதுல நினைக்க என்ன இருக்கு...? நீங்க இப்ப சொன்னதெல்லாம் விண்வெளி சம்பந்தப்பட்ட விஷயங்கள்!”

“இதுல உங்களுக்கு நம்பிக்கை இருக்கா டாக்டர்?”

“கண்டிப்பாய். இப்ப நீங்க சொன்னதெல்லாம் விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்த உண்மைகள்.”

“அப்படீன்னா… இது எல்லாமே கற்பனையாய் இருக்க வாய்ப்பு இல்லை?”

“நிச்சயமாய் இல்லை...!”

“ஓ.கே... டாக்டர்...! நான் இப்போ கேட்கப் போகிற கேள்விதான் முக்கியம். இந்தப் பிரபஞ்சத்தில் நம்ம பூமியைப் போலவே ஒரு பூமியும், அந்தப் பூமியில் நம்மை மாதிரியே மனிதர்களும் இருப்பாங்கன்னு நீங்க நம்பறிங்களா டாக்டர்…?”

“இருக்கலாம்ன்னு... விண்வெளி ஆராய்ச்சியாளர்கள் சொல்லிட்டு. இருக்காங்க...! ஆனா அந்த உண்மை இன்னமும் உறுதிப்படுத்தப்படலை. அது சம்பந்தமான ஆராய்ச்சிகள் தொடர்ந்து நடந்துட்டு இருக்கு. இப்ப எதுக்காக இந்தக் கேள்வியையெல்லாம் கேட்டுகிட்டு இருக்கீங்க...?”

“டாக்டர்... நான் இப்ப சொல்லப் போகிற பிரச்னைக்கும் நான் கேட்ட சந்தேகங்களுக்கும் ஒரு தொடர்பு இருக்கு.”

“என்ன தொடர்பு…?”

“நாம வசிக்கிற இந்தப் பூமியைப் போலவே இன்னொரு பூமி இந்தப் பிரபஞ்சத்துல இருக்கு டாக்டர். அந்தப் பூமியின் பேரு சோல்ட்ரான். 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருக்கிற ‘சாட்ராஸ்’ என்கிற ஒரு

நட்சத்திரத்தை இந்த ‘சோல்ட்ரான்’ என்கிற பூமி சுற்றி வந்துகிட்டு இருக்கு...”

“அப்படீன்னு எந்தப் புஸ்தகத்திலாவது படிச்சீங்களா?”

“படிக்கலை டாக்டர்.”

“பின்னே?”

“கனவு கண்டேன்...”

“கனவா...?”

“ஆமா டாக்டர்... இது ஒரு தடவை வந்த கனவு இல்லை. பல தடவை வந்த கனவு…”

டாக்டர் உதயபானு மெல்லச் சிரித்தாள்.

“கனவு என்பது நம்முடைய கற்பனையான எண்ணங்களின் வெளிப்பாடு… நிறைய விண்வெளி சம்பந்தப்பட்ட புத்தகங்களைப் படிப்பீங்களா...?”

“அப்படிப்பட்ட புத்தகங்களைக் கண்ணால் கூட நான் பார்த்தது இல்லை டாக்டர்...”

“சரி... நீங்க... என்ன வேலை பார்க்கறீங்க...?”

“ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் அஸிஸ்டண்ட் மானேஜராய் ஒர்க் பண்றேன்.”

“எந்த ஹோட்டல்?”

“இன் த ஸ்கை இன்டர்நேஷனல் ஹோட்டல்.”

“தரமணியில் இருக்கே அந்த ஹோட்டலா?”

“ஆமா டாக்டர்...!”

“உங்களுக்குக் கல்யாணமாயிடுச்சா?”

“இன்னும் இல்லை…! ஆனா ஒரு பெண்ணைக் காதலிக்கிறேன். அடுத்த வருஷ ஆரம்பத்துல கல்யாணம் பண்ணிக்கப் போறேன்!”

“சரி அது… என்ன கனவுன்னு சொன்னீங்க?”

“நம்ம பூமியைப் போலவே ‘சோல்ட்ரான்’ என்கிற பேர்ல இன்னொரு பூமி இந்தப் பிரபஞ்சத்துல இருக்குன்னு சொல்ற மாதிரியான ஒரு கனவு…!”

“அப்படின்னு யார் சொல்றாங்க...?”

“கனவுல வர்ற அந்தக் கிரகவாசிகள்…!”

டாக்டர் உதயபானு சற்றே நிமிர்ந்து உட்கார்ந்தாள்.

‘இந்த கேஸ் கொஞ்சம் சுவாரஸ்யமாய் இருக்கும் போலிருக்கே!’ என்ற எண்ணத்துடன் தொடர்ந்து பேச ஆரம்பித்தாள்.

“யார் அந்தக் கிரகவாசிகள்...?”

“ஒருத்தன் பேரு அஸ்ரா, இன்னொருத்தன் பேர் லியோ. ரெண்டு பேர் தலைகளிலேயும் ஆன்டெனாக்கள் பொருத்தப்பட்ட ஹெல்மெட் மாதிரியான அமைப்பு. நான் தினமும் ராத்திரி படுத்துத் தூங்கின கொஞ்ச நேரத்துக்குள்ளே கனவு வரும். அந்தக் கனவுல நான் சொன்ன அந்த ரெண்டு பேரும் வருவாங்க. அந்த சோல்ட்ரான் கிரகத்தோட அதிபர்கிட்டே நம்ம பூமி கிரகத்தைப்பத்தி பேசிட்டிருப்பாங்க...”

“அப்படி என்ன பேசுவாங்க...?”

டாக்டர் உதய பானுவின் உதட்டில் தொற்றியிருந்த கேலிப் புன்னகையைப் பார்த்துவிட்ட உத்தம சோழன் ஒரு பெருமூச்சோடு அவளை ஏறிட்டான்.

“என்ன டாக்டர்... நான் சொன்னதை நீங்க நம்பலை போலிருக்கே...?”

“இல்லை... நம்பறேன்... உங்க பிரச்னை கொஞ்சம் விசித்திரமாய் இருந்ததால உள்வாங்கிக்க எனக்குக் கஷ்டமாய் இருந்தது. நீங்க சொல்லிட்டு வாங்க. அந்தச் சோல்ட்ரான் கிரகத்து அதிபரும், அப்புறம் அந்த ரெண்டு பேரும். பேர் என்ன சொன்னீங்க...?”

“அஸ்ரா, லியோ...!”

“ம்… அந்த ரெண்டு பேரும் சோல்ட்ரான் கிரகத்து அதிபரோடு நம்ம பூமியைப்பத்தி என்ன பேசிக்குவாங்க?”

உத்தம சோழன் சில விநாடிகள் மௌனமாய் இருந்துவிட்டு பேச ஆரம்பித்தான். இப்போது அவனுடைய குரல் சற்றே தணிந்து இருந்தது.

“நம்ம பூமியின் குறிப்பட்ட ஒரு இடத்திலிருந்து ஏதோ ஒரு கதிர்வீச்சு அவங்க சோல்ட்ரான் கிரகத்தை நோக்கி வர்றதாகவும். அது ஒரு ஆபத்தான கதிர் வீச்சுன்னும் அந்தக் கதிர்வீச்சைத் தடுத்து நிறுத்தறதுக்காக அஸ்ரா, லியோ ரெண்டு பேரும் பூமியை நோக்கிப் பயணப்படப் போறதாகவும் பேசிக்குவாங்க...!”

“அவங்க என்ன மொழியில் பேசிக்குவாங்க?”

“தமிழ்...!”

“அந்தச் சோல்ட்ரான் கிரகம் நம்ம பூமியைப் போலவே இருக்குமா?”

“நம்ம பூமியைப் போல் பசுமையாய் இருக்காது. எந்தத் திசையைப் பார்த்தாலும் ஊதா நிறமாய் இருக்கும். மரம், செடிகளில்கூட அந்த ஊதா நிறம் தெரியும்...”

“மனிதர்கள் எப்படி இருப்பாங்க?”

“எல்லோருமே உயரமாய் இருப்பாங்க. ஆண் பெண் இரண்டு பேர்களின் தலைகளிலும் ஹெல்மெட் மாதிரியான அமைப்பும், அதுல குச்சி குச்சியாய் ஆன்டெனாக்களும் பொருத்தப்பட்டு இருக்கும். மக்கள் பெருக்கம் அதிகமாய் இருக்காது. சுத்தமான சாலைகளில் சொற்ப பேர் மெதுவாய் நடை போட்டுகிட்டு இருப்பாங்க. சாலைகளுக்கு மேலே இருபதடி உயரத்தில் அல்ட்ரா சோனிக் கார்கள் பறந்துட்டு இருக்கும்.”

“இது மாதிரியான கனவு உங்களுக்கு எத்தனை தடவை வந்து இருக்கும்...?”

“பல தடவை...!”

“பல தடவைன்னா...?”

“முப்பது... நாற்பது தடவை”

“மை குட்னஸ். இந்தக் கனவு வரும்போதெல்லாம் இந்த மூணுபேர் மட்டும்தான் வர்றாங்க… திரும்பத் திரும்ப அந்த கதிர்வீச்சைப் பத்தித்தான் பேசறாங்க. இல்லையா?”

“ஆமா டாக்டர்…! அந்த அஸ்ராவும், லியோவும் கூடிய சீக்கிரம் பூமிக்கு வரப் போறாங்க.”

“இப்படிப்பட்ட ஒரு கனவு அடிக்கடி உங்களுக்கு ஏன் வரணும்...? இதுதானே இப்போதைக்கு உங்களோட பிரச்னை?”

“ஆமா... டாக்டர்...!”

“மிஸ்டர் உத்தம சோழன்... நான் ஒண்ணு சொன்னா நீங்க தப்பாய் நினைச்சுக்க மாட்டீங்களே?”

“நோ... டாக்டர்...! இன்னிக்கு சிட்டியிலேயே நீங்கதான் நம்பர் ஒன் சைக்யாட்ரிஸ்டிக்ட். யாருக்கு எப்படிப்பட்ட மனோரீதியான பிரச்னை இருந்தாலும் அதைச் சரியான விதத்துல அணுகி ட்ரீட்மெண்ட் குடுத்து குணப்படுத்தறதுல எக்ஸ்பர்ட்ன்னு ஒரு பத்திரிகையில் எழுதியிருந்தாங்க. அதைப் பார்த்துட்டுத்தான் நான் இங்கே வந்தேன்.”

“என்னோட பிரச்னை என்னான்னு நான் சொல்லிட்டேன். அதுக்கான தீர்வையும் ட்ரீட்மெண்ட்டையும் நீங்கதான் எனக்குத் தரணும்! நீங்க என்கிட்டே என்ன சொல்ல விரும்பறிங்களே. அதை தாராளமாய் சொல்லலாம். நான் எதையும் தப்பாய் எடுத்துக்க மாட்டேன்!”

“தேங்க்யூ உத்தம சோழன்...! ஒரு டாக்டர்க்கு இப்படிப்பட்ட ஒரு ஒத்துழைப்புதான் பேஷண்ட்கிட்டேயிருந்து வேணும்! நான் இப்போ சொல்லப் போறதை நல்லா கவனிக்கணும்!”

“சொல்லுங்க டாக்டர்...!”

“மனுஷனாய் பிறந்த எல்லார்க்குமே தூங்கும்போது கனவு வரும். அந்தக் கனவு எப்படி வேண்டுமானாலும் வரலாம். சிலர்க்கு சினிமா மேல விருப்பம் இருக்கலாம். அவங்களுக்குத் தூங்கும் போது சினிமா நடிகர்களும் நடிகைகளும் கனவுல வருவாங்க. ஆன்மிக எண்ணம் கொண்ட ஆட்களுக்கு கோயில் சம்பந்தப்பட்ட கனவுகள் வரலாம். அதே மாதிரி கிரிக்கெட் விளையாட்டில்...”

உத்தம சோழன் குறுக்கிட்டான்.

“ஸாரி டாக்டர்! நீங்க என்ன சொல்ல வர்றீங்கன்னு எனக்குத் தெரியது. எனக்கு இந்த விண்வெளி, பால்வெளி மண்டலம், கோள்கள் - இது மேல ஒரு ஈடுபாடு இருக் கிறதாலதான் இது மாதிரியான கனவுகள் வருதுன்னு சொல்லப் போறீங்க இல்லையா?”

“அதேதான்...!”

“மறுபடியும் ஸாரி டாக்டர்...! எனக்கு இந்த வான சாஸ்திரம் பற்றி எதுவும் தெரியாது. அதைப் பற்றியெல்லாம் தெரிஞ்சுக்கணும் என்கிற ஆர்வமும் எனக்கு இல்லை...”

“சின்ன வயசுல... அதாவது ஸ்கூல் டேஸ்ல காமிக்ஸ் புக்ஸ் நிறையப் படிப்பீங்களா?”

“ஒரு புத்தகம் கூடப் படிச்சதில்லை டாக்டர். நீங்க நினைக்கிற மாதிரி இது சாதாரணக் கனவு இல்லை. உணர்வுபூர்வமானது. கனவில் நான் பார்க்கிற அந்தச் கோல்ட்ரான் கிரகம், அந்த அஸ்ரா, லியோ, அந்தக் கிரக அதிபர் எல்லோருமே ஏதோ ஒரு வகையில் என்னோடு சம்பந்தப்பட்டு இருக்காங்க. திரும்பத் திரும்ப அவர்களே என கனவுல வர்றாங்க.”

“சரி... இந்த இடத்துல நான் ஒரு கேள்வி கேட்கட்டுமா?”

“கேளுங்க டாக்டர்...!”

“நீங்க சொல்ற அந்தச் சோல்ட்ரான் கிரகம் 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் ஏதோ ஒரு நட்சத்திரத்தை சுத்திக்கிட்டு இருக்கிற ஒரு வேற்று கிரகம்… இல்லையா?”

உதயபானு கேட்ட கேள்விக்கு உத்தம சோழன் தலையாட்டினான்.

“ஆமா.”

“சரி! உங்க கனவுல வர்ற அந்தக் கிரகத்தின் அதிபரும், அஸ்ரா, லியோ என்கிற அந்த இரண்டு பேரும் எந்த மொழியில் பேசிக்கிறாங்க...?”

“தமிழில்…”

“வேற்றுக் கிரகவாசிகளுக்கு நம்ம தமிழ் மொழி எப்படித் தெரியும்...? தமிழ் என்கிற ஒரு மொழி இருக்கிறது. இந்த உலகத்தில் இருக்கிற பெரும்பாலான நாட்டு மக்களுக்கே தெரியாதபோது 15 ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருக்கிற வேற்றுக் கிரகவாசிகளுக்கு எப்படித் தெரியும்…?”

“அதனால்தான் டாக்டர் இந்தக் கனவு உணர்வு பூர்வமானதுன்னு சொல்றேன். அப்புறம், இதுல இன்னொரு விஷயமும் இருக்கு டாக்டர்...”

“என்ன?”

“பூமியின் ஒரு குறிப்பிட்ட இடத்திலிருந்து ஒரு எலக்ட்ரான் கதிர்வீச்சு சோல்ட்ரான் கிரகத்தை நோக்கி வந்துகிட்டு இருக்கிறதாய். கிரக அதிபர் சொன்னதாகக் குறிப்பிட்டிருந்தேன் இல்லையா டாக்டர்…?”

“ஆமா...! தமிழ்நாட்டில் கன்னியாகுமரிக்குப் பக்கத்தில் ‘அக்னிப் புழுதி’ என்கிற கிராமத்துல இருக்கிற ஒரு பழங்கால வீட்டிலிருந்து அந்த எலக்ட்ரான் கதிர் வர்றதா நீங்க சொன்னீங்க…!”

“அந்தப் பழங்கால வீடு என்னோட வீடுதான் டாக்டர்!”

***

# 4

இப்போது ‘க்ளோபல் வார்மிங்’ என்கிற வார்த்தை பிரபலம். அதாவது நமது பூமி கிரகம் நாளுக்கு நாள் சூடாகிக் கொண்டு வருகிறது என்பதை விஞ்ஞானிகள் இந்த வார்த்தையால் சொல்லிக் கொண்டு இருக்கிறார்கள். 1990-களில் இருந்த விஞ்ஞானிகள் இந்த ‘க்ளோபல் வார்மிங்’ என்கிற வார்த்தைக்குப் பதிலாக ‘க்ரீன் ஹவுஸ் எஃபெக்ட்’ என்னும் வார்த்தையைப் பயன்படுத்தி உலக மக்களை எச்சரித்துக் கொண்டு இருந்தார்கள். இந்த ‘க்ளோபல் வார்மிங்’ உண்டாக முக்கிய காரணம் என்ன என்பதை விஞ்ஞானிகள் ஆராய்ந்தபோது கிடைத்த உண்மை இது.

இப்போதுள்ள மக்கள் பெட்ரோல், டீசல், எரிவாயு, நிலக்கரி போன்ற எரி பொருள்களை எரிக்கும்பொழுது வெளிப்படுகின்ற ஒரு வகையான வெப்ப அலைகளை **$CO_2$IFR** என்று விசால்கிறார்கள். இதன் விரிவாக்கம் கார்பன்-டை-ஆக்ஸைட் இன்ஃப்ரா வரட், இந்த வெப்ப அலைகள் காற்றில் மேல் நோக்கிச் சென்று நமது பூமியை மூடியிருக்கும் ஓஸோன் படலத்தைத் துளைத்துக் கொண்டு தப்பித்துச் செல்ல முயற்சி செய்யும். அந்த முயற்சியில் 20 சதவீதம் தப்பித்துப் போனாலும் மீதி 80 சதவீதம் திரும்பவும் நம் பூமிக்கே வருவதால் பூமி, அடுப்பில் வைத்த தோசைக் கல்லைப் போல் சூடு அடைகிறது. இப்படிப் பூமி வெப்பமடைவது நல்லதா கெட்டதா...? சில விஞ்ஞானிகள் நல்லது என்கிறார்கள். சில விஞ்ஞானிகள் அபாயம் என்று அலறுகிறார்கள். எது உண்மை?

ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்குள் காலைச் சூரியனின் கதிர்கள் புகுந்து இருட்டையும் பனியையும் விரட்டி அடித்திருக்க, மொத்த காட்டுப் பகுதியும் துலக்கிய பாத்திரம் போல் வெளிச்சமாய் இருந்தது.

ஃபாரஸ்ட் கெஸ்ட் ஹவுஸின் முன்பாய் புல்வெளியில் அந்தப் பத்து இளைஞர்களும் தெரிய, அவர்களுக்கு எதிரே சால்வையைப் போர்த்தியபடி ராஜவேலு நின்றிருந்தார். செயற்கையாய் இரண்டு முறை இருமிவிட்டு மெல்லிய குரலில் பேச ஆரம்பித்தார்.

“ராத்திரியிலிருந்தே எனக்கு உடம்பு கொஞ்சம் சரியில்லை, வீஸிங் ப்ராப்ளம். ஃபீவரிஷ்ஷா ஃபீல் பண்றேன். நான் ஒரு ரெண்டு நாளைக்கு ரெஸ்ட் எடுக்க வேண்டியிருப்பதால் ‘இருட்டுப் பள்ளம்’ ஸ்பாட்டுக்குப் போறதை நிறுத்தி வைப்போம். தியரி வொர்க் மட்டும் பார்ப்போம்.”

ஒரு இளைஞன் குரல் கொடுத்தான்.

“ஸார்!”

“என்ன...?”

“இந்த ஃபாரஸ்ட்டிலிருந்து பத்து கிலோ மீட்டர் தள்ளி ஒரு வாட்டர் ஃபால்ஸும், கோயிலும் இருக்கு. நாங்க போயிட்டு வரலாமா?”

“தாராளமாய்ப் போயிட்டு வாங்க. ரெண்டு நாள் உங்களுக்கு ஃப்ரீ எங்கே வேணும்னாலும் போங்க. ஆனா சாயந்தரம் அஞ்சு மணிக்குள்ளே கெஸ்ட் ஹவுஸுக்கு வந்துடுங்க...!”

“தேங்க் யூ. ஸார்…!”

“எனக்கு உடம்பு சரியில்லையேன்னு யாரும் ஃபீல் பண்ண வேண்டாம். ட்யூ டு ஏஜ் ஃபேக்டர். இது எல்லாம் எனக்கு வழக்கமாய் வர்றதுதான். ரெண்டு நாளைக்கு ரெஸ்ட் எடுத்தா போதும். நான் நார்மலுக்கு வந்துடுவேன்.”

“ஸார்...! எங்கள்ல யாராவது ஒருத்தர் உங்களுக்குத் துணையாய் இருக்க விரும்பறோம்…!”

“அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். சமையல் பண்ற நாராயணன் இருக்கும்போது என்ன பயம்...? எனக்கு ஏதாவது தேவைப்பட்டால் நான் நாராயணனைக் கூப்பிட்டுக்கிறேன். நீங்க எல்லாரும் போயிட்டு வாங்க...!”

ராஜவேலு தீர்மானமாய்ச் சொல்லிவிட எல்லோரும் நகர்ந்தார்கள்.

அடுத்த ஒரு மணி நேரத்திற்குள் பத்து பேரும் ஒரு வேனில் புறப்பட்டுப் போய்விட... ராஜவேலு தன்னிடம் இருந்த செல்போனை எடுத்தார். மார்க்கண்டேயனைத் தொடர்பு கொண்டார். மெல்ல குரல் கொடுத்தார்.

“ஹலோ!”

பதிலுக்கு மார்க்கண்டேயனின் குரல் கேட்டது.

“சொல்லுங்க ராஜவேலு…!”

“நாம போட்ட திட்டத்துல ஒரு மாறுதல்!”

“என்ன...?”

“எனக்குக் கீழே வேலை பார்க்கிற பத்து ஆர்க்கியாலஜி ரிசர்க் ஸ்காலர்ஸும் இப்போ ஸ்பாட்ல இல்லை. எனக்கு உடம்பு சரியில்லை... ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட் வேலைகளை ரெண்டு நாள் கழிச்சுப் பார்த்துக்கலாம்’னு நான் சொன்னதும், அவங்க இங்கிருந்து பத்து கிலோ மீட்டர் தள்ளியிருக்கிற ஒரு வாட்டர் ஃபால்ஸசிக்கு ஜாலி ட்ரிப் போயிட்டாங்க. சாயந்தரம் அஞ்சு மணிக்குத்தான் வருவாங்க.

“அந்தப் பத்து பேரும் திரும்பி வர்றதுக்குள்ளே நாம ஃபாரஸ்ட்டுக்குள்ளே இருக்கிற ஸ்பாட்டுக்குப் போய் கை விரல் எலும்புகள் கிடைச்ச இடத்தைத் தோண்டிப் பார்த்துட்டா என்ன?”

“இது சாத்தியமா!”

“ஏன் சாத்தியம் கிடையாது?”

“பகல் நேரத்துல ஃபாரஸ்ட் ரேஞ்சர்ஸோட நடமாட்டம் இருக்குமே!”

“இருந்தா என்ன...? அவங்களோட அனுமதியின் பேரில்தான் இந்த ஃபாரஸ்டில் ஒரு இடத்தைத் தேர்ந்து எடுத்து. தோண்டி ஆராய்ச்சி பண்ணிட்டிருக்கோம். நாம ராத்திரி வேளையில் போறதைவிட இந்தப் பகல் நேரத்தில் போறது உத்தமம்னு நினைக்கிறேன். ஏன்னா. இந்தப் பகல் நேரத்துல போனாலே அந்த இடம் சூரிய வெளிச்சம் இல்லாம அரையிருட்டாய்த்தான் இருக்கும்.”

“டார்ச் லைட்டும், ஃபோக்கஸ் லைட்டும் இல்லாம நம்மால மண்ணைத் தோண்ட முடியாது. இதே வேலையை நாம ராத்திரி செய்யும்போது நிறைய சிரமப்பட வேண்டியிருக்கும்!”

“இட்ஸ்... ஓ.கே. ராஜவேலு...! என்னோட துறை வேற. உங்க துறை வேற. உங்களுக்கு எது சரின்னு படுதோ அதைச் செய்யறதுதான் உத்தமம். ஏன்னா இந்த ஆர்க்கியாலஜி சம்பந்தப்பட்ட விஷயங்கள் எனக்கு எதுவும் தெரியாது. நான் உடனே புறப்பட்டு வர்றேன். இன்னிக்கே தோண்டிப் பார்த்துடுவோம்.”

“அதுக்கு முன்னதாய் ஒரு விஷயம்…”

“என்ன...?”

“சின்னதாய் ஒரு பிசினஸ் டீல். பேசிக்கலாமா?”

“பிசினஸ் டீலா…! நீங்க என்ன சொல்றீங்க. ராஜவேலு…?”

“உங்களுக்குத் தெரியாதது ஒண்ணுமில்லை… இந்த டி.என்.ஏ. ஆராய்ச்சியில ஏதாவது ஒரு உண்மையைக் கண்டுபிடிச்சு இண்ட்டர்நேஷனல் அளவில் நீங்க பெரிய ரிசர்ச் ஸ்காலராய் வரணும்னு நினைக்கறிங்க. அப்படி ஒரு நிலைமை வந்துட்டா உங்களுடைய பொருளாதாரப் பின்னணி எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பார்த்தேன்.”

“இப்ப நீங்க என்ன சொல்ல வர்றிங்கன்னு தெரியுது. எனக்குக் கிடைக்கப் போகிற பணத்தில் உங்களுக்கும் ஒரு கணிசமான பங்கு உண்டு ராஜவேலு.”

“நான் இப்படி வெளிப்படையாய்ப் பணம் கேட்டதில் உங்களுக்கு எந்த ஒரு வருத்தமும் இல்லையே. மார்க் கண்டேயன்?”

“நோ… நோ…! நீங்க எனக்குப் பண்ணியிருக்கிற உதவி சாதாரண உதவியில்லை. நான் இதுவரைக்கும் பார்க்காத அப்நார்மல் சைஸ் மனித விரல் எலும்புகளை, நியாயப்படி பார்த்தா அரசாங்கத் தொல்பொருள் ஆராய்ச்சிக் கூடத்துக்கு நீங்க அனுப்பி வெச்சிருக்கணும்.

“ஆனா என்னுடைய டி.என்.ஏ. ஆராய்ச்சிக்கு அது உதவட்டும்னு என்னைக் கூப்பிட்டுக் காட்டியதோடு மட்டும் இல்லாம என்கிட்டயே அதை ஒப்படைச்சுட்டீங்க. உங்க நிலைமையில் யார் இருந்தாலும் அரசாங்கத்துக்குத் தெரியாம ஒரு தனிப்பட்ட நபர்க்கு குடுத்து இருக்கமாட்டாங்க...!”

“நிலைமையைச் சரியா புரிஞ்சு வெச்சிருக்கீங்க…! உடனடியாய்ப் புறப்பட்டு வாங்க. அந்த இடத்தை இன்னும் கொஞ்சம் ஆழமாய்த் தோண்டி வேற ஏதாவது எலும்புகள் கிடைக்குதான்னு பார்த்துடலாம்…!”

***

# 5

‘இந்தப் பூமி கிரகத்தில் மனிதன் எப்படித் தோன்றினான்**...?’**

இந்தக் கேள்விக்கு உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் ஏதாவது ஒரு பதிலைச் சொல்லி அந்த மதத்தில் இருப்பவர்களை நம்ப வைத்து விடுகின்றன. அவர்களும் அதைக் கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறார்கள். மனிதனைப் படைத்தது இறைவன் என்கிறது மெய்ஞானம். ஆனால் விஞ்ஞானமோ மனிதன் என்பது வெறும் பாஸ்பரஸ், கால்சியம், ஹைட்ரஜன், நைட்ரஜன் போன்ற ரசாயனங்களின் கலவை என்கிறது. ஒரு மனிதனின் மரணத்துக்குப் பின்னால் எதுவும் இல்லை என்கிறது விஞ்ஞானம். ஆனால் மனிதனின் மரணத்துக்குப் பின்னால் அவனுடைய ஆத்மா இந்த உலகத்திலேயே சுற்றி மறுபடியும் ஒரு உயிராகப் பிறக்கிறது என்கிறது மெய்ஞானம். சரி மனிதன் இந்த உலகில் முதன் முதலில் எந்த இடத்தில், எப்போது தோன்றினான் என்பதைப் பார்ப்போம். அதன் பிறகு மனிதன் என்பவன் விஞ்ஞானத்தின் வெளிப்பாடா. இல்லை, மெய்ஞானத்தின் விளைவா என்பதை ஆராய்வோம்.

சைக்யாட்ரிஸ்ட் உதயபானு உத்தம சோழனை ஒரு வியப்புப் பார்வையால் நனைத்துக் கொண்டே கேட்டாள்.

“என்னது...! உங்க கனவில் வர்ற பழங்கால வீடு உங்களோடதா?”

“ஆமா டாக்டர். என்னோட அந்த வீட்டுக்குத்தான் சோல்ட்ரான் கிரகத்திலிருந்து அஸ்ரா - லியோ என்கிற கிரகவாசிகள் வரப் போறாங்க.”

“சரி... அவங்க எதுக்காக உங்க வீட்டுக்கு வரணும்?”

“அதான் சொன்னேனே டாக்டர். என்னோட வீட்டிலிருந்து வெளிப்படுகிற ஏதோ ஒரு கதிர்வீச்சுதான் அவங்க வாழற... சோல்ட்ரான் கிரகத்தைப் பாதிக்குதாம்… அதைத் தடுத்து நிறுத்தறதுதான் அவங்க நோக்கம்.”

“உங்க கனவு வெரி... வெரி... இண்ட்ரஸ்டிங்...! கேட்க கேட்க ரொம்பவும் த்ரிலிங்கா இருக்கு. ம்… மேற் கொண்டு சொல்லுங்க…”

உத்தம சோழன் லேசாய் எரிச்சலானான்.

“ஸாரி டாக்டர்! நீங்க என்னோட பிரச்னையை சீரியஸாவே எடுத்துக்கலை. நான் ஏதோ கதை சொல்றதாய் நினைச்சுட்டு இருக்கீங்க. இனிமே இதைப்பத்தி உங்ககிட்ட பேசிப் பிரயோஜனமில்லை. நான் வேற ஒரு டாக்டரைப் பார்க்கிறேன்.” சொல்லிக் கொண்டே எழ முயன்றான்.

உதயபானு கையமர்த்தினாள்.

“ப்ளீஸ்... உட்கார்ங்க உத்தம சோழன்…! நீங்க இப்படிக் கோபப்படறதுல அர்த்தமேயில்லை… நான் ஒரு மன நலம் சம்பந்தப்பட்ட டாக்டர். என்கிட்ட பல பேர் பல பிரச்னைகளோடு வர்றாங்க... ஒரு விஷயத்தைப் பத்தி அவங்க சொல்லும்போது அது அந்தச் சந்தர்ப்பத்தில் பூதாகாரமாய்த் தெரியும். நான் ட்ரீட்மெண்ட் கொடுத்த அடுத்த சில நாட்களுக்குள்ளேயே அந்தப் பிரச்னை ஒரு கடுகு மாதிரி சிறுத்து காணாமப் போயிடும். உங்க விஷயத்திலேயும் அப்படித்தான் நடக்கப் போகுது...!

“சோல்ட்ரான் என்கிற வேற்று கிரகவாசிகள் உங்க கனவுல அடிக்கடி வர்றாங்க என்கிற விஷயமும், உங்க வீட்டிலிருந்து வெளிப்படுகிற ஏதோ ஒரு கதிர்வீச்சு கோடிக்கணக்கான மைல்களைத் தாண்டி எங்கோ ஏதோ ஒரு நட்சத்திரத்தைச் சுற்றிக் கொண்டிருக்கிற சோல்ட்ரான் என்கிற கிரகத்தைப் பாதிக்கிற விஷயமும், அந்தப் பாதிப்பைச் சரிப்படுத்த அஸ்ரா - லியோ என்கிற இரண்டு வேற்றுக் கிரகவாசிகள் உங்க வீட்டுக்கு வரப்போகிற விஷயமும் உங்களைப் பொறுத்தவரை சீரியஸ். பட்... என்னைப் பொறுத்தவரை இது நோய். நோயைக் குணப்படுத்தறதுதான் ஒரு டாக்டரோட கடமை. அந்தக் கடமை யிலிருந்து விலகி நானும் உங்களோடு சேர்ந்துகிட்டு “ஆமா. இது ஒரு சீரியஸான மேட்டர்தான்னு கவலைப்பட்டா உங்க பிரச்னை எப்படிச் சரியாகும்?”

“ஸாரி டாக்டர்…! நான் ஏதோ உணர்ச்சிவசப்பட்டு பேசிட்டேன். என்னோட இந்தப் பிரச்னைக்கு உங்க தீர்வு என்ன?”

“உடனடியாய் இப்போ உங்களுக்குத் தேவை ஒரு நல்ல கவுன்ஸிலிங்…”

உத்தம சோழன் விரக்தியாய்ப் புன்னகைத்தான்.

“அதாவது கவுன்ஸிலிங் என்கிற பேர்ல என்னைச் சமாதானப்படுத்தப் போறிங்க. அப்படித்தானே டாக்டர்?”

“நோ... நோ… கவுன்ஸிலிங் கொடுக்கப் போறது நானில்லை. உங்க பிரச்னையோடு சம்பந்தப்பட்ட ஒருத்தர்.”

“யார் அவர்...?”

“விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவை உங்களுக்குத் தெரியுமா?”

“பேர் கேள்விப்பட்டு இருக்கேன். டி.வி. நியூஸ்ல அடிக்கடி அவரோட

பேரைச் சொல்லுவாங்க. மற்றபடி அவரைப் பற்றி எனக்கு எதுவும் தெரியாது.”

“நான் சொல்றேன்… விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மா இந்தியாவின் விண்வெளி ஆராய்ச்சிப் பிரிவில் வேலை பார்த்து டைரக்டராய் பதவி உயர்வு பெற்று மூன்று வருஷத்துக்கு முன்பு ரிடையரானவர். அவர் பணி பாற்றிய காலகட்டத்தில் இந்தப் பிரபஞ்சத்தில் மறைந்து இருக்கும் பல உண்மைகளை வெளியே கொண்டு வந்தவர். அதுக்காகப் பல விருதுகளை வாங்கியவர்.

“வேலையிலிருந்து ரிடையரானதும் சென்னைக்கே வந்து போட் கிளப் ரோட்டில் இருக்கிற அவரோட வீட்டில் குடியேறி விட்டவர். என்னோட அப்பாவுக்கு நண்பர். நான் அவரைப் பார்க்க நேரும்போதெல்லாம் விண்வெளி சம்மந்தப்பட்ட சுவையான விஷயங்களைப் பேசக்கூடியவர். உங்களுக்கு வர்ற கனவு விண்வெளி சம்பந்தப்பட்டதாய் இருக்கிற காரணத்தால் அவர்கிட்ட உங்களைக் கூட்டிப் போய் - அவர் உங்களுக்கு ஒரு கவுன்ஸிலிங் கொடுத்தா அது சரியாய் இருக்கும்னு நினைக்கிறேன்... நீங்க என்ன சொல்றீங்க, உத்தம சோழன்?”

“டாக்டர் எனக்கு இருக்கிற பிரச்சனையைத் தீர்த்து வைக்கப் போறவங்க நீங்க. அந்த வகையில் நீங்க என்ன சொன்னாலும் அதைக் கேட்க நான் தயாராய் இருக்கேன்!”

“நாளைக்கு ஞாயிற்றுக்கிழமை. காலையில் ஒரு பத்து மணி சுமார்க்கு அவரைப் பார்த்துடலாமா?”

“பார்த்துடலாம் டாக்டர்...!”

“நான் இப்பவே அவர்கிட்ட பேசி அப்பாயிண்ட்மெண்ட் வாங்கிடறேன்.”

உதயபானு சொல்லிக் கொண்டே மேஜையின் மேல் இருந்த தன்னுடைய செல்போனை எடுக்க முயன்ற விநாடி –

உத்தமசோழன் நாற்காலியினின்றும் மெதுவாய் எழுந்தான். பார்வையில் பயம். உடம்பில் பதட்டம். குரலில் குளிர்.

“டா…க்…ட…ர்…”

“என்ன உத்தமசோழன்...! ஏன் எழுந்துட்டீங்க...?”

அவன் ஜன்னல் பக்கமாய் ஒரு கலவரப் பார்வை பார்த்துவிட்டு

குரலைத் தாழ்த்தினான்.

“டா… டா… டாக்டர் அவங்க வந்துட்டாங்க...”

உதயபானு தன் புருவங்களைச் சற்றே உயர்த்தினாள்.

“அவங்கன்னா... யாரு...?”

“சோல்ட்ரான் கிரகவாசிகள் அஸ்ராவும், லியோவும்.”

“எ… எ… எங்கே...?”

“அதோ...! அந்த ஜன்னலுக்குப் பின்னாடி இருக்கிற செடியோட மறைவில் ரெண்டு பேரும் ஒளிஞ்சுட்டு இருக்காங்க…!”

***

# 6

நாம் வாழும் இப்போதைய பூமியில், முதல் மனிதன் உருவானது ஒரு லட்சத்து ஐம்பது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு என்கிறது ஒரு விஞ்ஞானியின் ஆராய்ச்சி ரிப்போர்ட். அந்த ரிப்போர்ட் மாலிக்யூவர் பயாலஜி என்னும் ஒரு அறிவியல் உண்மையை அடிப்படையாகக் கொண்டு கணிக்கப்பட்டது. இதற்கு இன்னொரு வபயர் மைட்டோ காண்ட்ரியா டி.என்.ஏ. இந்த அடிப்படை உண்மையை மேலும் கசக்கிப் பிழிந்ததில் அதிலிருந்து இன்னொரு உண்மையும் மெல்ல எட்டிப் பார்த்தது. அதாவது இந்தப் பூமிப்பந்தில் முதன் முதலாய் மனிதன் தோன்றிய இடம் ஆப்பிரிக்கா கண்டம்.

மனித எண்ணிக்கை வயருக, உணவுத் தேவைக்காகவும் மற்ற தேவைகளுக்காகவும் மனிதன் இடம் பெயர்ந்ததின் விளைவு அந்தந்தப் பகுதிகளின் சீதோஷ்ண நிலைக்கு ஏற்றபடி உடல் அமைப்பும் முகத்தோற்றமும் மாறியது. இப்போதுள்ள ஆன்த்ராபயாலஜி எனப்படும் உடலியல் ரீதியை அடிப்படையாய் வைத்து மனிதர்களை ஐந்து வகைகளாகப் பிரித்து வைத்துள்ளர்கள்.

1. ஆஸ்திரேலியன், 2. ஆப்பிரிக்கன், 3. ஏசியன், 4. நியூகினியன், 5. காகேஸியன்.

நம் இந்தியர்கள் எல்லோரும் ஏசியன் என்ற பிரிவைச் சேர்ந்தவர்கள். ஐந்து வகையான மனிதர்கள் இருந்தாலும் 5000 ஜாதிகள் உருவாகக் காரணம் மனித மனங்களோடு உள்ளே

இருக்கும் சுயநலம்தான்.

ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்குள் அந்த முற்பகல் நேரத்திலும் குளிரும் இருட்டும் பரவியிருக்க, அண்மை யில் பெய்த மழை ஒட்டுமொத்தக் காட்டுப் பகுதியையும் பசுமையாக்கியிருந்தது.

பெரிய பெரிய மரங்கள் வானத்தைப் பார்க்கப் போயிருந்தன.

ராஜவேலு ஜீப்பை ஒட்டிக் கொண்டிருக்க, பக்கத்தில் உட்கார்ந்திருந்த மார்க்கண்டேயன் தன் தாடையில் இருந்த பிரெஞ்ச் தாடியை இடது கை விரல்களால் நிரடிக் கொண்டே கேட்டார்.

“ராஜவேலு…! உங்களுடைய உதவியாளர்கள் திரும்பி வர்றதுக்குள்ளே நம்ம வேலை முடிஞ்சுடும் இல்லையா?”

“கண்டிப்பாய்…! நம்ம ஸ்பாட்டுக்கு இன்னும் ஒரு கிலோ மீட்டர் தூரம்தான் இருக்கு. அஞ்சு நிமிஷத்துக்குள்ளே போயிடலாம்.”

“அந்த மெகா சைஸ் மனிதக் கைவிரல்களின் எலும்புகள் கிடைச்சமாதிரி மற்ற மற்ற எலும்புகளும் கிடைச்சுட்டா என்னோட ஆராய்ச்சியின் அடுத்த கட்டம் அற்புதமாய் இருக்கும். பார்க்கலாம். இன்னிக்கு நம்ம அதிர்ஷ்டம் எப்படியிருக்குன்னு…”

“எனக்கு ஒரு சந்தேகம் மார்க்கண்டேயன்!”

“என்ன?”

“நம்முடைய பண்டைய - புராண காலங்களில் அசுரர்கள் பூதாகாரமான தோற்றத்துடன் இருந்ததாய் குறிப்பிடப்பட்டு இருக்காங்க. இது ஏன் ஒரு அசுரனின் எலும்புக்கூடாய் இருக்கக்கூடாது…?”

“நோ... ராஜவேலு! எனக்கு இந்தப் புராணகால கதைகளில் நம்பிக்கையில்லை. இப்படியொரு மெகா சைஸ் மனித விரல்களின் எலும்புகள் பூமிக்கடியில் புதையுண்டு இருப்பதற்கு ஒரு அறிவியல்ரீதியான காரணமும் இருக்கு…!”

“அறிவியல் ரீதியான காரணமா...?”

“எஸ்…! இது ஏன் ஒரு ஏலியனின் எலும்புக்கூடாய் இருக்கக்கூடாது...?”

“யூ… மீன்… வேற்றுக் கிரகவாசி…!”

“அதேதான்…! இந்தப் பிரபஞ்சத்துல நாம மட்டும் மனிதர்கள் இல்லை. நம்மை மாதிரியான தோற்றத் தோடோ அல்லது நம்மைவிட மாறுபட்ட தோற்றத்தோடோ உயிரினங்கள் வேற்றுக் கிரகங்களில் இருக்கலாம். நாம் விண்வெளி ஆராய்ச்சி செய்து வேற்றுக் கிரகங்களில் உயிரினம் இருக்கிறதா இல்லையா என்று தெரிந்து கொள்ள ஆர்வப்படுவது போல் வேற்றுக் கிரக மனிதர்களும் ஆர்வப்பட்டு நம் பூமியில் வந்து இறங்கியிருக்கலாம் இல்லையா...?”

“அதுக்கான ஆதாரங்கள் நம்மகிட்ட இல்லையே... எல்லாமே கெஸ் ஒர்க்தானே...?”

“அந்த கெஸ் ஒர்க் வெறும் கற்பனையில்லை. சாத்தியமான ஒண்ணுதான்! இன்னிக்கு நமக்குக் கிடைக்கப் போகிற மற்ற எலும்புகளை வெச்சுத்தான் ஒரு உறுதியான முடிவுக்கு வர முடியும்...”

மார்க்கண்டேயன் பேசிக் கொண்டு இருக்கும் போதே ஜீப் நின்றது.

“இதுக்கு மேல ஜீப் போகிற அளவுக்கு ரோடு கிடையாது. ஒரு அரை கிலோ மீடடர் தூரம் உள்ளே ஒற்றையடிப் பாதையில் நடந்து போகணும்!”

ராஜவேலுவும் மார்க்கண்டேயனும் ஜீப்பிலிருந்து இறங்கினார்கள். சுற்றிலும் கோரைப்புற்கள் மண்டியிருந்தது.

“உங்களோட உபகரணங்களை எடுத்துகிட்டீங்களா மார்க்கண்டேயன்?”

“ம்... எடுத்துக்கிட்டேன். அதுல முக்கியமானது போன் ஐடென்டிஃபையர். பூமிக்குக் கீழே எவ்வளவு அடி ஆழத்தில் மனித எலும்புகள் இருந்தாலும் அது துல்லியமாய்க் காட்டிக் கொடுத்துவிடும். அது தவிர, போர்ட்டபிள் ட்ரில்லர் மெஷினையும் கொண்டு வந்திருக்கேன்.”

இருவரும் நடந்தார்கள்.

தோள் உயரத்திற்கு மேலே வளர்ந்து இருந்த கோரைப் புற்களுக்கு நடுவே ஒரு ஒற்றையடிப் பாதை உற்பத்தியாகி கோணல் மாணலாய் அவர்களைக் கூட்டிக் கொண்டு போயிற்று.

உள்ளே போகப் போக சூரிய வெளிச்சம் சிறிது சிறிதாய் குறைந்து அரையிருட்டுத்தனம் தெரிந்தது. அந்த அரையிருட்டில் சாய்வாய் நடப்பட்டு இருந்த ஒரு பெயர்ப் பலகையும் பார்வைக்குக் கிடைத்தது.

'எச்சரிக்கை. இது தடை செய்யப்பட்ட பகுதி!

தொல்பொருள் ஆராய்ச்சித் துறை இந்தப் பகுதியை ஒரு களமாய் எடுத்துக் கொண்டு ஆய்வுப் பணிகளை மேற்கொண்டு இருப்பதால் இந்த எல்லையைத் தாண்டி அந்நியர்கள் பிரவேசிக்கக்கூடாது.

மேலும், இந்தப் பகுதியில் காணப்படும் அரிய வகை கூழாங்கற்களைத் தனிப்பட்ட ஒரு நபர் எடுத்துச் செல்வது சட்டப்படி தண்டனைக்குரிய குற்றமாகும். காட்டிலாகா அதிகாரிகள் உங்களைச் சோதனை செய்யும் போது உங்களிடம் கற்கள் இருந்தால், நீங்கள் காவல் துறையினரால் கைது செய்யப்படுவீர்கள்.

இப்படிக்கு.

தொல்பொருள் பாதுகாப்புத்துறை.'

மார்க்கண்டேயன் படித்துவிட்டுச் சிரித்தார். “இது வரைக்கும் அப்படி யாராவது மாட்டியிருக்காங்களா?”

“இல்லை…! இது காட்டின் உள்பகுதி. இங்கே யாரும் வர வாய்ப்பு இல்லை…!”

“உண்மையிலேயே இங்கே அரிய வகை ஸ்படிகங்கள் இருக்கா?”

“இதுவரைக்கும் தோண்டிப் பார்த்ததுல அரிய வகைக் கற்கள் நிறையக் கிடைச்சிருக்கு. ஆனா அதெல்லாம் ஸ்படிகங்களா இல்லையான்னு இனிமேல் தான் ஆய்வு செய்யணும்.”

பேசிக்கொண்டே ஒற்றையடிப் பாதையில் பத்து நிமிஷம் நடந்த பிறகு, சதுரமாகவும், நீள் செவ்வகமாகவும் தோண்டப்பட்ட பெரிய குழிகள் வரிசையாய் வந்தன. பக்கத்திலேயே கற்குவியல்கள்.

“இது எல்லாமே ஆராய்ச்சிக் குழுவினரால் தோண்டப்பட்ட குழிகள். அந்தக் கற்கள் எல்லாம் தோண்டப்பட்ட மண்ணிலிருந்து சேகரிக்கப்பட்டது…!”

“சரி... அந்த மனித விரல் எலும்புகள் கிடைச்ச குழி எது...?”

“அதோ! நடுவுல தெரியுதே ஒரு பெரிய சதுரமான குழி. அதுதான்... இப்படி ஓரமாய் வாங்க மார்க்கண்டேயன்... அந்தப் பக்கமாய் போனா மண் சரியும். மண் சரியும் போது நம்ம உடம்பை நம்மால பேலன்ஸ் செய்ய முடியாது… கண்மூடி கண் திறக்கிறதுக்குள்ளே குழிக்குள்ளே விழுந்துடுவோம்.”

“இங்கே இப்படி ஒரு பிரச்னை இருக்கா...!”

மார்க்கண்டேயன் ஓரமாய் நடந்து வந்தார்.

ராஜவேலு தன் கையில் இருந்த ஒரு பெரிய டார்ச்சை உயிர்ப்பித்தார். வெளிச்சக் கதிர்கள் குழிக்குள் பாய்ந்து அங்கே பதுங்கியிருந்த இருட்டை விரட்டி அடிக்க - இரும்பாலான ஏணி ஒன்று குழியின் ஓரமாய் தெரிந்தது.

“மார்க்கண்டேயன்! இது பதினைந்து அடி ஆழக் குழி. ஏணியில் ஒவ்வொருத்தராய்த்தான் இறங்கணும். மொதல்ல நான் இறங்கறேன். அப்புறமா நீங்க இறங்குங்க. நீங்க கொண்டு வந்திருக்கிற உபகரணங்களை உங்க முதுகோடு சேர்த்துக் கட்டிக்கோங்க...”

ராஜவேலு சொல்லிவிட்டு டார்ச் வெளிச்சத்தின் உதவியோடு ஏணியில் இறங்க ஆரம்பித்தார். தொடர்ந்து மார்க்கண்டேயனும் இறங்கினார்.

பிரகாசமான டார்ச் லைட் வெளிச்சத்தில் தன் முதுகோடு சேர்த்துக் கட்டியிருந்த உபகரணங்களை அவிழ்த்தார்.

“எந்த இடத்தில் அந்த மனித விரல் எலும்புகள் கிடைச்சதாய் சொன்னீங்க ராஜவேலு?”

ராஜவேலு தன் கையில் இருந்த டார்ச் லைட்டைத் திருப்பி… தனக்கு வலது பக்கத்தில் இருந்த சிறிய பள்ளங்களைக் காட்டினார்.

“இதோ…! இந்த இடத்தில்தான்...”

“மேற்கொண்டு அதே இடத்தில் தோண்டலாமா...?”

“அதே இடத்தில் தோண்டினால்தான் அந்த மனித உடல் சம்பந்தமான மற்ற எலும்புப் பகுதிகளும் கிடைக்கும்! ம்... அந்த ட்ரில்லர் மெஷினை இங்கே கொண்டு வாங்க…!”

ராஜவேலு சொல்லிக் கொண்டு இருக்கும்போதே குழிக்குள் யாரோ மூச்சிறைப்பது போல் சத்தம் கேட்டது.

திடுக்கிட்டுப் போய் நிமிர்ந்தார் ராஜவேலு.

“மார்க்கண்டேயன்…! நீங்க இப்போ பெருமூச்சு விட்டீங்களா...?”

“இ... இ... இல்லையே!”

“யாரோ பெரிசா மூச்சு விடறமாதிரி சத்தம் கேட்டது. உங்களுக்குக் கேட்டதா?”

“ம்... எனக்கும் கேட்டது.”

மார்க்கண்டேயன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ராஜவேலுவின் கையில் இருந்த டார்ச் சட்டென்று அணைந்து போக - குழியில் இப்போது கும்மிருட்டு.

“ராஜவேலு…! டார்ச் ஏன் அணைஞ்சுது...?”

“தெரியலையே…!”

டார்ச்சின் சுவிட்ச்சை அணைத்து அணைத்துப் போட்டார். டார்ச் உயிர் பெறவில்லை.

“டார்ச்சை என்கிட்டே கொண்டாங்க!”

மார்க்கண்டேயன் - இருட்டில் வியர்த்து வழியும் முகத்தோடு கேட்டார்.

“டார்ச்சில் இருக்கிற பாட்டரி செல்கள் புதுசுதானே?”

“இன்னிக்குக் காலையில்தான் புது செல்களைப் போட்டேன். திடீர்ன்னு டார்ச் வேலை செய்யாமப் போனதுக்கு என்ன காரணம்ன்னு தெரியலையே...?” ராஜவேலு சொல்லிக் கொண்டிருக்கும்போதே மறுபடியும் குழிக்குள் அந்த மூச்சிரைப்பு சத்தம்.

இருவரும் அதிர்ந்து போனவர்களாய் ஒருத்தர் கையை இன்னொருத்தர் பயத்தோடு பற்றிக் கொண்பார்கள்.

ராஜவேலுவின் குரல் நடுங்கியது.

“மார்க்கண்டேயன்…! இந்த இடத்துல ஏதோ ஒரு விபரீதம் இருக்கு. நாம் உடனடியாய் இங்கிருந்து கிளம்பிடறது உத்தமம். இங்கே தோண்டற வேலையை இன்னொரு நாளைக்குப் பார்த்துக்கலாம்!”

வியர்த்து வழிந்து கொண்டு இருவரும் ஒருவர் பின் ஒருவராய் ஏணியில் ஏறி குழிக்கு மேல் வந்தார்கள்.

ஜீப் நிறுத்தப்பட்டு இருந்த இடத்தை நோக்கி வேக வேகமாய் ஓட்ட நடையில் போனார்கள்.

***

# 7

இந்தப் பிரபஞ்சத்தில் எத்தனையோ நட்சத்திரங்கள் அந்த நட்சத்திரங்களைச் சுற்றி எத்தனையோ கிரகங்கள். அப்படிப்பட்ட கிரகங்களில் நம்முடைய பூமியும் ஒன்று. மனித மனதுக்குப் பிரமிப்பாய்த் தெரியும் இந்த பூமி, பிரபஞ்சத்தின் பார்வையில் ஒரு துணுக்கு. இந்தத் துணுக்குகள் மீதுதான் நாம் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம். இந்தப் பூமியில் பிறக்கும் பெரும்பாலோர் ஏதோ பிறந்து விட்டோம் என்று ஒரு வாழ்க்கையை வாழ்ந்துவிட்டு மறைந்தும் போய்விட்டார்கள். ஆனால் சிலர் மட்டும், நாம் யார்...? இந்தப் பூமி எப்படி வந்தது? பிரபஞ்சம் எப்படி உருவாயிற்று? என்று யோசிக்க ஆரம்பித்தார்கள்.

அதன் விளைவு பல உண்மைகள் வெளியே வந்தது. அது சரி, இப்போது நம் கேள்வி இதுதான். இந்தப் பூமியில் பிறந்த முதல் மனிதனுக்கும் மூளை இருந்தது. ஆனால் அது இப்போதைய மனிதனின் மூளை போல் விசயல்படவில்லையே, ஏன்? ஆரம்ப காலத்தில் இருந்த மனிதனின் மூளைத் திறனைக் காட்டிலும் இப்போதுள்ள மனிதனின் மூளைத் திறன் மிகவும் அதிகமாக உள்ளது. அதற்கு என்ன காரணம்?

டாக்டர் உதயபானு ஒரு கேலிச் சிரிப்போடு உத்தம சோழனைப் பார்த்தாள்.

“எ…எ… என்ன சொன்னீங்க... சோல்ட்ரான் கிரக வாசிகள் அந்த ஜன்னலுக்குப் பின்னாடி ஒளிஞ்சுட்டு இருக்காங்களா...?”

“ஆமா… டாக்டர்...! நான் இப்போ பார்த்தேன். ரெண்டு பேரும் ஜன்னலுக்குப் பின்னாடி இருக்கிற செடி யோரமாய்ப் பதுங்கியிருக்காங்க. வாங்க பார்க்கலாம்…!”

உத்தம சோழன் ஜன்னலை நோக்கிப் போனான். உதயபானுவும் அவனைத் தொடர்ந்தாள்.

இருவரும் ஜன்னலுக்கு வெளியே பார்வையைக் கொண்டு போய் செடிக்குப் பின்புறமாய் போட்டார்கள்.

யாரும் இல்லை. செடியின் இலைகள் மட்டுமே காற்றுக்கு வேகமாய் அசைந்து கொண்டு இருந்தது.

உதயபானு ஒரு புன்னகையோடு உத்தம சோழனின் தோளைத் தொட்டாள்.

“என்ன... யாரையும் காணோம்?”

“அந்தச் சோல்ட்ரான் கிரகவாசிகள் ரெண்டு பேரையும் நான் இப்போ பார்த்தேன் டாக்டர். ரெண்டு பேரும் ஊதா நிறத்தோடு இருந்தாங்க. தலையில் ஒரு இரும்புத் தொப்பி மாதிரி கவசம். அதில் மெல்லிய ரோமங்கள் மாதிரி நிறைய ஆன்டெனாக்கள்.”

“இதோ பாருங்க உத்தம சோழன்…! நீங்க எப்பப் பார்த்தாலும் அந்தக் கனவைப் பற்றியே நினைச்சுட்டு இருக்கிறதால உங்களுக்கு அந்தப் பிம்பங்கள் பார்வைக்குத் தட்டுப்படற மாதிரித் தோணுது. இது ஒரு வகையான இல்யூஷன். விரிச்சுவல் இமேஜ்ன்னும் சொல்லலாம்…!”

“இல்ல டாக்டர்…! நான் பார்த்தது கற்பனை இல்லை. நிஜம் அஸ்ரா, லியோ என்கிற அந்த இரண்டு பேரும் ஏதோ பறவைகள் பறக்கிற மாதிரி பறந்து வந்து அந்தச் செடிக்குப் பின்னாடி மறைஞ்சு உட்கார்ந்தாங்க…!”

“நீங்க அந்த ரெண்டு பேரையும் பார்த்தது நிஜம்ன்னா அந்தச் செடிக்குப் பின்னாடி அவங்க இருக்கணுமே…?”

“அதான் எனக்கு ஆச்சர்யமாய் இருக்கு…!”

“எல்லாமே பிரமை...! உங்களை இந்தப் பிரமையிலிருந்து விடுவிக்க வேண்டியது என்னுடைய வேலை. அந்த வேலையின் முதல் கட்டம் நாளைக்குக் காலையில் பத்து மணிக்கு நாம ரெண்டு பேரும் விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவைப் போய்ப் பார்க்கிறோம். அவர் உங்களுக்கு ஒரு கவுன்ஸிலிங் கொடுப்பார். அதுக்குப் பிறகு நீங்க தெளிவாயிடுவீங்க!”

“நாளைக்குக் காலையில் ஒன்பது மணிக்கெல்லாம் நீங்க வந்துடுங்க. நம்ம கார்லயே போயிட்டு வந்துடலாம்!”

“தேங்க் யூ டாக்டர்…! நான் நாளைக்குக் காலையில் ஒன்பது மணிக்கெல்லாம் வந்துடறேன்!” சொன்ன உத்தம சோழன் மறுபடியும் ஜன்னல் பக்கம் பயத்துடன் கூடிய பார்வை ஒன்றை போட்டுவிட்டு நகர்ந்தான்.

உதயபானு சில விநாடிகள் வரை ஜன்னல் பக்கமாய் நின்றுவிட்டு பின் இருக்கைக்கு வந்தாள். தன் செல்போனை எடுத்துக் கொண்டு 'கான்டாக்ட்ஸ்' ஆப்ஷனுக்குப் போய் ஒரு எண்ணைத் தேடிப் பிடித்து,

பட்டனை அழுத்தினாள்.

மறு முனையில் ரிங் டோனாய் ஒரு வயலின் இசை எழுந்தது. தொடர்ந்து குரல் கேட்டது. சற்றே வயோதிகமான குரல்.

“ஹலோ! அயாம்... ஹரிவர்மா ஸ்பீக்கிங்!”

உதயபானு குரல் கொடுத்தாள்.

“அங்கிள் நான் உதயபானு.”

மறுமுனையில் ஹரிவர்மா சிரித்தார்.

“ஓ... பைத்தியத்துக்கெல்லாம் வைத்தியம் பார்க்கிற டாக்டரா?”

“அங்கிள்! ஐ அப்ஜக்ட் யுவர் வேர்ட்ஸ். பைத்தியம் என்கிற வார்த்தையை யூஸ் பண்ணாதீங்க…!”

“சரி…! மனநலம் சரி இல்லாதவர்கள் ஓ.கே.வா...?”

“இது சரியான வார்த்தை!”

“என்னம்மா திடீர்னு போன்…? அப்பா எப்படியிருக்கார்?”

“வெரி ஃபைன்.” என்ற உதயபானு குரலைத் தாழ்த்தினாள்.

“அங்கிள்! நீங்க இப்ப ஃப்ரீயா இருக்கீங்களா?”

“ஃப்ரீதான் என்ன விஷயம் சொல்லும்மா!”

“அங்கிள் ரெண்டு மாசத்துக்கு முன்னாடி ஒரு நாள் உங்க வீட்டுக்கு நான் வந்தபோது நீங்க ஒரு விஷயம் சொன்னீங்க. அதாவது இந்தப் பிரபஞ்சத்துல நம்ம பூமி மாதிரியே இன்னொரு பூமி ஏதோ ஒரு நட்சத்திரத்தை மையமா வெச்சு சுத்திகிட்டு இருக்கிறதாகவும், மேலும் அந்தக் கிரகத்தில் நம்மைப் போலவே உயிரினம் இருக்க வாய்ப்பு இருக்கிறதாகவும் சொன்னீங்க. ஞாபகம் இருக்கா...?”

“நல்லாவே இருக்கு. நீ கூட அதை நம்பாம அப்படி இருக்க வாய்ப்பு இல்லைன்னு சொன்னே...?”

“நீங்க சொன்ன அந்த வேற்றுக் கிரகத்தோட பேரைச் சொல்லுங்க…!”

“சோல்ட்ரான்…! அது ஒரு ஊதாநிற கிரகம். அங்கே இருக்கிற எல்லா உயிரினங்களுமே ஊதா நிறத்துலதான் இருக்கும். அந்தச் சோல்ட்ரான் கிரகம் சாட்ராஸ் என்கிற நட்சத்திரத்தைச் சுற்றி வருது.

பூமியிலிருந்து 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருக்கு சோல்ட்ரான்.”

“மை குட்னஸ்...”

“என்னம்மா…! ரெண்டு மாசத்துக்கு முன்னாடி நான் இதே சோல்ட்ரான் கிரகத்தைப் பத்தி சொன்னபோது அம்புலிமாமா கதைன்னு சொன்னே. இப்போ மை குட்னஸ்னு சொல்றே…!”

“அங்கிள்! நாளைக்குக் காலையில் பத்து மணிக்கு ஒரு பேஷண்ட்டோடு உங்களை வந்து பார்க்கிறேன்.”

“என்னது! பேஷண்ட்டைக் கூட்டி வர்றியா?”

“ஆமா அங்கிள் கொஞ்ச நேரத்துக்கு முந்தி உத்தம சோழன் என்கிற ஒரு இளைஞன் ஒரு மனரீதியான பிரச்னையோடு என்கிட்டே வந்தான். அவனோட பிரச்னை நீங்க சொன்ன அந்தச் சோல்ட்ரான் கிரகம்தான்.”

“நீ என்னம்மா சொல்றே?”

“அங்கிள்! ஃபோன்ல எந்த விஷயமும் வேண்டாம். நான் நேர்ல வந்து எல்லாத்தையும் சொல்றேன்…!”

உதயபானு படபடவென்று பேசிவிட்டு செல்போனை அணைத்தாள்.

***

# 8

மனிதன் ஒரு அறிவாளியாக, விஞ்ஞானியாக, புதிய புதிய பொருள்களைக் கண்டுபிடிப்பவனாக மாறியது, கடந்த சில நூற்றாண்டுகளாகத்தான். காரணம், மனித மூளை 400 கோடி ஆண்டுகளுக்கு முன் பெற்றிருந்த பரிணாம வளர்ச்சி வேறு விதமாக இருந்தது. அப்போது இருந்த மூளையின் செல்களில் நியூரான்கள் இவ்வளவு எண்ணிக்கையில் இல்லை. இருந்தாலும் மனிதன் சிந்தித்தான். அப்போதைய அறிவை அடிப்படையாக வைத்துக் கொண்டு உணவுக்கான பயிர்களை வளர்த்தான். ஆடை நெய்து அணியக் கற்றுக் கொண்டான். பேசும் மொழிக்கான எழுத்துக்களையும் கணிதத்தையும் உருவாக்கினான். சேர - சோழ - பாண்டியன் காலத்தில் யாரும் மின்சாரத்தைக் கண்டுபிடிக்கவில்லை. அவர்கள் மின்சாரத்தைக் கண்டுபிடிக்கவில்லை என்கிற

காரணத்துக்காக முட்டாள்கள் என்று சொல்ல முடியாது. ஒவ்வொரு காலகட்டத்திலும் கோடியில் ஒருவர்க்கு ஏதாவது ஒரு புதிய பொருளைக் கண்டுபிடித்துவிடும் வல்லமை வந்து விடுகிறது.

மைக்கேல் ஃபாரடே மின்சாரத்தைக் கண்டுபிடித்தார். தாமஸ் ஆல்வா எடிசன் மின்சாரத்தை வைத்து ஒரு கண்ணாடி பல்ப் மூலம் வெளிச்சத்தைக் கொடுக்க முடியும் என்று நிரூபித்தார். மார்கோனி ரேடியோவைக் கண்டுபிடித்தார். இந்த 2013-வது வருடத்திய மனிதன் இந்தப் பிரம்மாண்டமான பூமிப்பந்தையே ஒரு கிராமமாக மாற்றிவிட்டான். 3013-ல் மனிதன் எப்படியிருப்பானோ? கற்பனை செய்து பார்த்துக் கொள்ளுங்கள்.

ராஜவேலு தன்னுடைய ரிசர்ச் ஸ்க்வாடில் இருந்த பத்து பேர்களையும் தனக்கு முன்பாய் உட்கார்த்தி வைத்துக் கொண்டு பேசிக் கொண்டிருந்தார்.

காட்டுப் பகுதியில் அது ஒரு மத்தியான வேளை.

“இன்னும் ஒரு வாரகாலத்துக்குள்ளே நாம இந்த ஸ்லிப் ராக் ஃபாரஸ்டில் அகழ்வாராய்ச்சியை முடிச்சிகிட்டு டெல்லி திரும்ப இருக்கிறோம். அரசாங்கத்தின் கனிம வளத்துறை நினைச்சபடி இந்த ஃபாரஸ்ட்டில் அரிய ஸ்படிகங்கள் எதுவும் இல்லை. அரிய வகைக் கற்கள் மட்டுமே கிடைச்சிருக்கு. அந்தக் கற்களால் எந்த ஒரு உபயோகமும் இல்லை. இனி, அரசுக்குச் சமர்ப்பிக்க வேண்டிய ரிப்போர்ட்டைத் தயாரிப்பது மட்டுமே நம்ம வேலை.”

ரிசர்ச் ஸ்க்வாடில் இருந்த ஒரு இளைஞன் கேட்டான்.

“ஸார்…! இந்த ஃபாரஸ்ட்டின் வேறு ஏதாவது பகுதியில் நாம தேடி வந்த ஸ்படிகங்கள் இருக்கலாம் இல்லையா?”

“மே… பி…! ஆனால் கனிம வளத்துறை நமக்குத் தேர்ந்து எடுத்துக் குடுத்த இடம் எதுவோ. அந்த இடத்தைத் தோண்டிப் பார்க்கத்தான் நமக்கு உரிமை. வேறு இடத்தைத் தொட நமக்கு அனுமதியில்லை…!”

“அப்படியானால் இந்தத் திட்டம் தோல்விதானா?”

“இதைத் தோல்வின்னு எடுத்துக்க முடியாது. அரிய வகை ஸ்படிகங்கள் இந்த முறை நம்முடைய பார்வைக்குத் தட்டுப்படாமல் போயிருக்கலாம். ஆனால் அரிய வகைக் கற்கள் கிடைச்சிருக்கு. இது ஒரு ஆரம்பம். நாம குடுக்கப் போகிற ரிப்போர்ட்டை வெச்சு நமக்குப் பின்னாடி வர்ற ஆராய்ச்சியாளர்கள் மறுபடியும் இந்த ‘ஸ்லிப் ராக்’

ஃபாரஸ்ட் பகுதியில் ஆராய்ச்சி நடத்த முன்வரலாம். அப்போது ஸ்படிகங்கள் அவர்களுடைய பார்வைக்குத் தட்டுப்படலாம்…!"

ராஜவேலு சொல்லிக் கொண்டிருக்கும்போதே அவருடைய செல்போன் உயிர்ப்பிடித்து வைப்ரேஷனில் ஒளிர்ந்தது.

எடுத்து, அழைப்பது யார் என்று பார்த்தார்.

மார்க்கண்டேயன்.

ரிசர்ச் ஸ்க்வாடுக்கு வேறு ஒரு பணியைக் கொடுத்து விட்டு செல்போனோடு ஒதுக்குப்புறமாய் போனார்.

மெல்ல குரல் கொடுத்தார். "ஹலோ"

"ராஜவேலு! நான் மார்க்கண்டேயன்..."

மறுமுனையில் இருந்த மார்க்கண்டேயனின் குரலில் பதட்டம்.

"சொல்லுங்க மார்க்கண்டேயன்...! கடந்த மூணு நாளாய் உங்ககிட்டேயிருந்து ஃபோன் வரலை."

"அன்னிக்குக் குழிக்குள்ளே நடந்த சம்பவத்தால ரொம்பவும் அதிர்ச்சியாயிட்டீங்க போலிருக்கு. அந்த மூச்சிரைப்பு சத்தத்துக்கும் டார்ச் லைட் அணைந்து போனதுக்கும் காரணம் என்னான்னு நான் கண்டுபிடிச்சுட்டேன். அதைச் சொல்லத்தான் ட்ரை பண்ணினேன்."

"எ... எ... என்ன காரணம்?"

"டார்ச் லைட் குழிக்குள்ளே அணைஞ்சு போன துக்குக் காரணம் - டார்ச்சிலிருந்த ஒரு வயர் கட்டாகியிருந்தது. அந்த மூச்சிரைப்புக்குக் காரணம் சில சமயம் அதிக ஆழமுள்ள குழிக்குள்ளே இருக்கும்போது நாம விடும் மூச்சு சத்தமே குழிக்குள்ளே இருக்கும் ஏதாவது ஒரு பாறைப் பகுதி மேல மோதி, எதிரொலிக்கும்."

"அப்படி எதிரொலிக்க... அது சில விநாடிகளை எடுத்துக் கொள்ளும். எதிரொலியோட டெசிபல் அதிகமாய் இருந்தா சத்தம் பெரிசா கேட்கும். இப்போ டார்ச்சை சரி பண்ணிட்டேன். மறுபடியும் ஒரு தடவை அந்தக் குழிக்குப் போய் எலும்புகளை எடுக்க முயற்சி பண்ணலாமா?"

"வே... வேண்டாம் ராஜவேலு. அந்த இடத்துல வேற ஏதோ விபரீதம் இருக்கு…"

“ஒரு விபரீதமும் இல்லை... நீங்க ரொம்பவும் பயந்துட்டீங்கன்னு நினைக்கிறேன்…”

“நோ… நோ… உண்மையைத்தான் சொல்றேன்… கடந்த மூணு நாளாய் நான் நார்மலாவே இல்லை. வீட்டுக்கு வந்ததிலிருந்து எந்த ஒரு வேலையையும் என்னால ஒரு ஈடுபாட்டோடு செய்ய முடியலை. சரியா சாப்பிட முடியலை. சரியாய் தூங்க முடியலை.”

“என்ன மார்க்கண்டேயன்! நீங்க இவ்வளவு கோழையாய் இருக்கீங்க...?”

“பயப்பட வேண்டியதுக்குப் பயப்பட்டுத்தானே ஆகணும்? கடந்த ஒரு மணி நேரமாய் எனக்கு இருக்கிற பிரச்னை என்ன தெரியுமா?”

“என்ன?”

“பத்து நிமிஷத்துக்கு ஒரு தடவை நான் எந்த ஒரு பொருளைப் பார்த்தாலும். அது எல்லாமே எனக்கு ஊதா நிறமாய்த் தெரியுது…”

ராஜவேலு திடுக்கிட்டார்.

“எ...எ... என்னது…! ஊதா நிறமாத் தெரியதா?”

“ஆமா…! இப்ப நான் ஒரு கண் டாக்டரைப் பார்க்கத் தான் போயிட்டிருக்கேன்…”

***

# 9

ஒரு மனித உடல், உயிர் அணுக்களால் உருவானது என்று நம் எல்லோர்க்கும் தெரியும். அதனுடைய எண்ணிக்கை எவ்வளவு என்று கேட்டால் 100க்கு 99 பேர்க்குத் தெரியாது. இப்போது நீங்கள் தெரிந்து கொள்ளுங்கள். நமது உடம்பில் விமாத்தம் ஆயிரம் பில்லியன் உயிர் அணுக்கள் உள்ளன. ஒரு பில்லியன் என்பது 100 கோடி. இப்படி ஆயிரம் பில்லியன் உயிர் அணுக்கள் ஒன்று சேர்ந்துதான் ஒரு ராஜேந்திரன், அல்லது ஒரு ரம்யா உருவாகிறார்கள். ஆயிரம் பில்லியன் உயிர் அணுக்கள் முதலில் ஒட்டுமொத்தமாகக் குடியிருக்கும் இடம் - ஒரு கருவுற்ற முட்டை. இந்த முட்டையில் இருக்கும் ஜீன்களில் தான் செய்திகள் பதிவாயிருக்கும். உருவாகப் போவது ஆண் குழந்தையா… பெண் குழந்தையா என்பதைத் தீர்மானித்துக் கொள்ளும்.

ஜீன்கள் உயிரணுக்களைத் தரம் பிரிக்கின்றன. நீ கண், நீ காது, நீ, மூக்கு, நீ இதயம், நீ சிறுநீரகம் என்று கட்டளையிட - கரு முட்டை வளர ஆரம்பிக்கின்றது. ஆரம்பத்தில் ஒரு அரிசியின் அளவே இருக்கும் கருமுட்டை பத்து மாத காலத்தில் கை கால் முளைத்து, இதயம் துடிக்க குழந்தையாய்ப் பிறப்பது அற்புதத்திலும் அற்புதம். இதுவும் ஒரு பிரபஞ்ச ரகசியம்தான்.

ஞாயிற்றுக்கிழமை காலை பத்துமணி.

விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவுக்கு எதிரே பாக்டர் உதயபானுவும் உத்தம சோழனும் உட்கார்ந்திருந்தார்கள்.

ஹரிவர்மாவின் முகத்தில் ஆச்சரியத்தின் அதிர்வலைகள்.

“உன் பேர் என்ன சொன்னே. உத்தம சோழனா?”

“ஆமா ஸார்...”

“எங்கே வேலை பார்க்கிறே?”

“இன் த ஸ்கை - ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் அஸிஸ்டண்ட் மானேஜராய் இருக்கேன்!”

“இந்தச் சோல்ட்ரான் கிரகவாசிகள் அடிக்கடி உன் கனவுல வர்றாங்களா?”

“ஆமா ஸார்…”

“ஒரு மாசத்துல எத்தனை தடவை இந்தக் கனவு வரும்?”

“ஏழெட்டு தடவையாவது வரும் ஸார். ஆரம்பத்தில் பயமாய் இருந்தது. இப்போ பழகிடுச்சு. ஆனா இப்போ முளைச்சிருக்கிற புதுப் பிரச்னை - அந்த இரண்டு கிரகவாசிகளும் பூமிக்கு வந்து திடீர் திடீர்ன்னு என் கண்ணுக்குத் தட்டுப்படறதுதான். நேற்றைக்குக் கூட டாக்டர்கிட்டே பேசிட்டு இருக்கும்போது ஜன்னலுக்கு வெளியே என்னோட பார்வைக்குத் தட்டுப்பட்டாங்க. மின்னல் வேகத்தில் மறைஞ்சுட்டாங்க…!”

ஹரிவர்மா இரு கைகளாலும் தன்னுடைய கன்னத்தைத் தாங்கிக் கொண்டார்.

“உத்தம சோழன்! நீ சொல்றதை நான் விளையாட்டாகவோ, வேடிக்கையாகவோ எடுத்துக்க மாட்டேன். ஏன்னா, நீ சொல்ற சோல்ட்ரான் கிரகத்தை ரெண்டு வருஷத்துக்கு முன்னாடியே நான்

என்னோட அஸ்ட் ரானமி உபகரணங்களை உபயோகப்படுத்திக் கண்டுபிடிச்சு. அதைப் பத்தின தகவலை நாசாவின் விண்வெளிப் பிரிவுக்குப் புகைப்படங்களோடு அனுப்பி வெச்சேன்.

“ஆனா நாசாவின் விண்வெளி விஞ்ஞானிகள் நான் கண்டுபிடிச்சது கிரகம் இல்லை. அது ஒரு மிகச் சிறிய அளவிலான வால் நட்சத்திரம்னு சொல்லி என்னோட கண்டுபிடிப்பை நிராகரிச்சுட்டாங்க... நீ இப்ப சொல்ற விஷயங்களைக் கேட்கும்போது என்னோட மனசுக்கு ரொம்பவும் சந்தோஷமாய் இருக்கு. பட், இந்தச் சோல்ட்ரான் கிரகம் சம்பந்தப்பட்ட கனவு உனக்கு ஏன் வரணும் என்கிற கேள்விக்கான பதிலை இனிமேல் நாம கண்டுபிடிச்சாகணும். நான் இப்போ கேட்கப் போகிற கேள்விகளுக்கு நீ பதில்களைச் சொல்லிட்டே வா!”

தலையாட்டினான் உத்தம சோழன்.

“நீ பிறந்தது கன்னியாகுமரிக்குப் பக்கத்தில் இருக்கிற ஏதோ ஒரு கிராமத்தோட பேர் சொன்னே...? அது என்ன கிராமம்?”

“அக்னிப் புழுதி.”

“பேரே வித்தியாசமாய் இருக்கே?”

“அப்படியொரு பேர் வர்றதுக்குக் காரணமும் இருக்கு ஸார்.”

“என்ன காரணம்?”

“பொதுவாய் கன்னியாகுமரியைச் சுற்றி இருக்கிற கிராமங்களில் வெயில் அதிகமாய் இருக்கும். ஏப்ரல், மே மாதங்களில் இன்னமும் அதிகமாய் இருக்கும். எவ்வளவு தான் வெயில் அடிச்சாலும் சாயந்தரம் ஆறு இல்லேன்னா ஏழு மணிக்குள்ளே பூமி குளிர்ந்து விடும். ஆனா நான் பிறந்த கிராமத்துல மட்டும் ராத்திரி பன்னிரண்டு மணியானாலும் நிலத்து மண் வெது வெதுன்னு சூடாவேயிருக்கும்.”

“அந்தக் கிராமத்து மண் ரோட்ல ஏதாவது வாகனம் வேகமாய்ப் போகும்போது புழுதி பறக்கும். அந்தப் புழுதி நம்ம முகத்துப் பகுதியில் படும்போது ஏதோ அடுப்புச் சாம்பல் மாதிரி வெம்மையாய் இருக்கும். அதனால்தான் இந்த ஊர்க்கு அக்னிப் புழுதின்னு பேரு. ஆனா எங்கப்பா வேற ஒரு காரணம் சொல்லுவார்.”

“என்ன காரணம்…?”

“என்னோட அப்பா பேரு சிவபாதம். அவர் சரித்திரப் பேராசிரியர்.

அக்னிப் புழுதி கிராமத்தில் இருந்த பழைய சிவன் கோயிலான பாதாள பைரேஸ்வரர் கோயிலில் இருக்கும் பழைய கல்வெட்டுக்களில் உள்ள எழுத்துக்களையும், அதில் செதுக்கியிருக்கும் சிற்பங்களையும் அடிப்படையாய் வெச்சு பல செய்திகளைச் சேகரித்தார்.”

“அதுல ஒரு செய்தி, அக்னிப் புழுதி என்கிற பெயர் வந்ததுக்கான காரணம். அதாவது அக்னிப் புழுதி கிராமத்திலிருந்து ஒரு பத்து கிலோ மீட்டர் தள்ளி ஒரு அடர்ந்த காட்டுப் பகுதி இருக்கு. நூறு வருஷத்துக்கு முந்தி அந்தக் காட்டுக்கு பேரு ‘காவு வாங்கிக் காடு’. அந்தக் காட்டுக்குள்ளே யார் போய்ட்டு வந்தாலும் ஒரு வார காலத்துக்குள்ளே செத்துடுவாங்களாம். இந்தச் செய்தி உண்மையா பொய்யான்னு யார்க்கும் தெரியாது. ஆனா யாருமே காட்டுப்பக்கம் போக மாட்டாங்க.”

“கடந்த முப்பது வருஷமா அந்தக் காட்டுப் பகுதி வனத்துறையோட கட்டுப்பாட்டுக்குள்ளே வந்தாச்சு. அதனோட பேரும் மாறியாச்சு. ‘காவு வாங்கிக் காடு’ன்னு இருந்த பேரை 'ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்’ன்னு மாத்திட்டாங்க...!”

ஹரிவர்மா புருவங்களை உயர்த்தினார்.

“ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டா...? என்னோட நண்பர் ஆர்க்கியாலஜி டிபார்ட்மெண்ட்டைச் சேர்ந்த ராஜவேலு அந்த ‘ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்’டைப் பற்றி அடிக்கடி சொல்வார். அந்த ஃபாரஸ்ட்டுக்குள்ளே அபூர்வமான ஸ்படிகங்கள் பூமிக்குள்ளே புதையுண்டு கிடக்கிறதாகவும், அரசாங்கம் அனுமதி கொடுக்கிற பட்சத்தில் அந்த இடத்தில் ஒரு அகழ்வாராய்ச்சியை மேற்கொள்ள இருப்பதாகவும் சொல்வார்.”

“ஸார்...! என்னோட அப்பா அந்த ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டைப் பற்றி இன்னொரு விஷயமும் சொல்வார். அதாவது அந்தப் பாதாள பைரேஸ்வரர் கோயிலில் உள்ள கல்வெட்டில் காணப்படுகிற ஒரு செய்தியின்படி அந்தக் காட்டுப் பகுதிக்குள் இரவு நேரங்களில் அந்நிய கிரகவாசிகள் சில நூற்றாண்டுகளுக்கு முன்பு வந்து விட்டுப் போயிருக்கிறார்களாம். அதைப் பற்றி என்கிட்ட அடிக்கடி - நான் ஸ்கூலில் படிக்கும்போது - சொல்வார்.”

உதயபானு உத்தம சோழனை வியப்புடன் பார்த்தாள்.

“இந்த விஷயத்தை நேற்றைக்கு நீங்க என்கிட்ட சொல்லலையே?”

“மறந்துட்டேன் டாக்டர்!”

“வேற்றுக் கிரகவாசிகள் உங்க கனவுல அடிக்கடி வர்றதுக்கான காரணம் உங்கப்பா சொன்ன அந்தக் கல்வெட்டு செய்திதான்!”

“டாக்டர் அந்த விஷயம் எப்பவோ - சின்ன வயசுல என்னோட அப்பா சொன்னது. அதெல்லாம் என் மனசுக்குள்ளே போயிருக்க வாய்ப்பு இல்லையே...?”

“நோ… யூ ஆர் ராங்..!. எப்பவும் சின்ன வயசுல தான் சில விஷயங்கள் பசுமரத்தாணி போல் பதியும். அப்படிப் பதிவான விஷயங்கள் வாழ்க்கையோட எந்த ஒரு கட்டத்திலும் எட்டிப் பார்க்கும்.”

“ஓ.கே. டாக்டர்…! நீங்க சொன்னதையே ஒரு வாதத்துக்கு வெச்சிக்கிட்டாலும் அந்தக் கிரகத்தோட பேர் சோல்ட்ரான் என்கிற விஷயமும், அந்தக் கிரகவாசிகள் ரெண்டு பேரோட பெயர்கள் அஸ்ரா, லியோ என்கிற விஷயமும் எனக்கு எப்படித் தெரியும்...? எல்லாத்துக்கும் மேலா என்னோட கிராமத்துப் பழைய வீட்டிலிருந்து ஒரு எலக்ட்ரானிக் கதிர்வீச்சு சோல்ட்ரான் கிரகத்தை நோக்கிப் பாயற விஷயம் எனக்குள்ளே பதிய வாய்ப்பே இல்லையே...!”

ஹரிவர்மா, உத்தம சோழன் சொன்னதை ஆமோதித்தார்.

“இதோ பாரம்மா உதயபானு…! உத்தம சோழன் சொல்றது ஒரு வகையில் சரிதான். அவரோட அப்பா சின்ன வயசில் சொன்ன ஒரு வேற்றுக் கிரகவாசிகளைப் பற்றிய செய்தி மட்டும்தான் தெரியும். ஆனால் நான் கண்டுபிடிச்ச சோல்ட்ரான் என்ற கிரகத்தோட பேர் தெரிய வாய்ப்பு இல்லையே...?”

“அங்கிள்! இந்த விஷயத்துல நமக்குத் தெளிவு கிடைக்கணும்னா நாம உடனடியாய் ஒரு வேலையைப் பண்ணணும்.”

“என்ன...?”

“உத்தம சோழன் பிறந்த கிராமமான அக்னிப் புழுதி கிராமத்துக்கு உடனடியாய் புறப்படறோம். அந்த வீட்டைப் பார்க்கிறோம். அவரோட அப்பா சரித்திரப் பேராசிரியர் சிவபாதத்தைப் பார்த்துப் பேசறோம்…!”

ஹரிவர்மா உத்தம சோழனைப் பார்த்தார்.

“நீ என்ன சொல்றே…? உனக்கு இதுல ஏதாவது ஆட்சேபணை இருக்கா?”

“ஒரு ஆட்சேபணையும் கிடையாது ஸார்! இன்னிக்கே, இப்பவே நாம மூணு பேரும் கிராமத்துக்கு கிளம்பலாம்.”

***

# 10

இந்தப் பிரபஞ்ச சிருஷ்டியில் இன்னொரு விநோதம் - அது ஆண், வயண் என்ற வேறுபாடு. எதற்காக இந்த வேறுபாடு என்று மேலோட்டமாகப் பார்த்தால், அது இன விருத்திக்கான ஒரு ஏற்பாடு என்பது நம் எல்லோர்க்கும் புரியும். ஆனால், ஆண், வயண் இரண்டு பேரில் ஆண் பலசாலியாகவும், பெண் பயந்த சுபாவம் கொண்டவளாகவும் (சில பெண்கள் இதற்கு விதிவிலக்கு) இருப்பது ஏன் என்ற கேள்விக்கு நமக்குக் கிடைக்கும் பதில் - இரண்டு பேர்களின் உடம்பில் சுரக்கும் ஹார்மோன்கள் வித்தியாசப்படுவதுதான்.

ஒரு ஆண் வேகமாய் ஓடுவதைப் போல் ஒரு பெண்ணால் வேகமாக ஓட முடியாது. 100 மீட்டர் தூர ஓட்டப் பந்தயத்தில் ஒரு ஆண் அந்தத் துரத்தை 9.25 விநாடிகளில் கடந்து விடுகிறான். ஆனால் விபண் 10.50 விநாடி எடுத்துக் கொள்கிறாள். அதே போல் கடினமான காரியங்களையெல்லாம் ஆண்தான் செய்ய வேண்டும் என்பதும், மென்மையான வேலைகள் எல்லாம் (தையல், டைப் அடிப்பது, ரிசப்ஷனிஸ்ட் போன்றவை) பெண்தான் செய்ய வேண்டும் என்பதும் பிரபஞ்சக் கட்டளைகளில் ஒன்று. அதே போல் ஒரு சிறிய பிரச்னைக்கும் பெண் உடனே அழ ஆரம்பித்து விடுவாள். ஆண் அப்படியல்ல. அந்தப் பிரச்னையை எப்படிக் கையாள்வது என்று யோசிப்பான்.

ஒரு பெண் அழுதால் அதைப் பார்த்து இன்னொரு பெண்ணும் சேர்ந்து அழுவாள். அழுகை டி.வி. தொடர்கள் ஐந்து வருஷமானாலும் வெற்றிகரமாய் ஓடுவதற்கான காரணம் இதுதான். ஒரு பெண் எந்த ஒரு விநாடியிலும் அழத் தயாராய் இருக்கிறாள் என்று ஒரு ஆராய்ச்சி சொல்கிறது.

‘இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகம்’ என்று பெயர்ப்பலகை சொல்ல - சென்னையின் தரமணி பகுதியில் இருந்த அந்தக் கட்டடத்துக்கு முன்பாகத் தன் காரை நிறுத்திவிட்டு உள்ளே போனார் ராஜவேலு.

அந்த முற்பகல் வேளையிலும் கட்டடம் அமைதியாய் இருந்தது.

கட்டடத்தைச் சுற்றிலும் வேப்ப மரங்களின் குளுமை.

ஹாலின் ரிசப்ஷன் கௌண்ட்டரில் இருந்த பெண் ராஜவேலுவைப் பார்த்ததும் பணிவாய் எழுந்து நின்றாள். கையில் இருந்த வார இதழைக் கவிழ்த்து வைத்தாள்.

“குட் மார்னிங் ஸார்!”

“என்னம்மா ரேவதி... இன்னுமா உனக்கு ட்ரான்ஸ்ஃபர் கிடைக்கலை…?”

“முயற்சி பண்ணிட்டிருக்கேன் ஸ்ார். எப்படியும் இந்த மாசத்துக்குள்ளே கிடைச்சுடும் ஸார்.”

“சரி... டைரக்டர் இருக்காரா...?”

“இருக்கார் ஸார்... உங்களுக்காகத்தான் வெயிட் பண்ணிட்டிருக்கார்.”

ராஜவேலு கடப்பைக்கல் பதித்த வராந்தாவில் ஒரு நிமிட நேரம் நடந்து, கடைசியில் இருந்த அறைக்குள் நுழைந்தார்.

ஒரு பழங்காலத் தேக்கு மேஜைக்குப் பின்னால் ரிடையர்ட் ஆகும் பக்குவத்தில் பளிரென்ற வழுக்கைத் தலையுடன் உட்கார்ந்திருந்தார். இ.தொ.ஆ. கழகத்தின் டைரக்டர் டேவிட் ஆசிர்வாதம்.

“குட் மார்னிங் ஆசிர்வாதம்!”

“வாங்க ராஜவேலு. குட்மார்னிங். உங்களுக்காகத் தான் வெயிட் பண்ணிட்டிருந்தேன். ப்ளீஸ் ஸிட்டட்...”

ராஜவேலு உட்கார்ந்தார்.

“காப்பி சாப்பிடலாமா?”

“எனக்கு டீ...”

“நோ ப்ராப்ளம்...” சொன்னவர் இண்ட்டர்காமின் ரிஸீவரை எடுத்து கேண்ட்டீனைத் தொடர்பு கொண்டு டீக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு ராஜவேலுவை ஏறிட்டார்.

“ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட் ரிப்போர்ட் பார்த்தேன். ரொம்பவும் ஏமாற்றமாய் இருந்தது. நீங்க ஆராய்ச்சிக்காக எடுத்துக்கிட்ட இடம் சரியில்லையோன்னு என்னோட மனசுக்குப் படுது.”

“நோ நோ... தேர்ந்தெடுத்தது சரிதான் ஆசிர்வாதம். ஆனால் நாம எதிர்பார்த்த ஸ்படிகங்கள் அங்கே கிடைக்கலை. பூமிக்குக் கீழே கிடைத்தது எல்லாமே ரேர் ஸ்டோன்ஸ்தான். பட் அது ஸ்படிகங்கள் இல்லை. ரிப்போர்ட் க்ளியராய் இருந்ததே?”

“அதே காட்டில் வேறு ஏதாவது பக்கம் தோண்டிப் பார்க்கலாமா?”

“எனக்கு நம்பிக்கையில்லை…! அந்த ஃபாரஸ்ட்ல இனிமேல் மேற்கொண்டு எந்த ஆராய்ச்சியும் நடத்த வேண்டாம்னு என்னோட மனசுக்குப் படுது.”

“ஏன் அப்படிச் சொல்றீங்க...?”

“அந்த காட்டுல ஏதோ ஒரு விபரீதம் இருக்கு.”

“விபரீதம்ன்னா...?”

“அது என்னன்னு எனக்கும் சொல்லத் தெரியலை. நான் அங்கே தங்கியிருந்தபோது சில விஷயங்கள் கேள்விப்பட்டேன்.”

“என்ன கேள்விப்பட்டீங்க...?”

“ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்குப் பக்கத்துல அக்னிப் புழுதின்னு ஒரு கிராமம். அந்தக் கிராமத்துல பாதாள பைரேஸ்வரர்ங்கிற பேர்ல ஒரு பழைய சிவன் கோயில் இருக்கு. அந்தக் கோயிலின் கல்வெட்டுகளில் சில விசித்திரமான செய்திகள் இருக்கிறதாகவும், அதுல ஒரு செய்தி ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டோட பழைய பெயர் ‘காவு வாங்கிக் காடு’ன்னும், அந்தக் காட்டுப் பகுதியில் இரவு நேரங்களில் வேற்றுக் கிரகவாசிகள் வந்து தங்கி இருந்துட்டுப் போவதாகவும் சொல்லப்பட்டு இருக்கு...”

“அட இந்தக் கதை எனக்குத் தெரியாதே?”

“மிஸ்டர் ஆசிர்வாதம் இது கதையில்லை. கோயில் கல்வெட்டில் எழுதப்பட்டிருக்கிற செய்திகள்.”

“சரி... மற்ற செய்திகள் என்ன...?”

“அது எனக்குத் தெரியலை. கல்வெட்டில் உள்ள எழுத்துக்கள் சரியாய்ப் புரியாத காரணத்தால் அந்தச் செய்திகள் பற்றிய விபரம் தெரியலை…!”

“எழுத்துக்கள் சரியாய்த் தெரியாதபோது அந்த வேற்றுக் கிரகவாசிகள் செய்தி மட்டும் எப்படித் தெரிஞ்சது?”

“இந்தக் கேள்விக்கு எனக்குப் பதில் தெரியாது மிஸ்டர் ஆசிர்வாதம்! ஆனா, அந்த வேற்றுக் கிரகவாசிகள் அந்தக் காட்டுப் பகுதியில் வந்து தங்கியிருந்ததற்கான ஆதாரம் கிடைச்சிருக்கு…!”

“என்ன ஆதாரம்...?”

“ஸ்படிக ஆராய்ச்சிக்காகக் குழிகளைத் தோண்டும் போது ஒரு அடி நீள கைவிரல் எலும்புகள் பூமிக்கடியில் கிடைச்சது. இந்த அளவு நீளத்துக்கு நம் பூமியில் இருக்கிற மனிதனுக்குக் கை விரல் எலும்பு இருக்காதே”

ஆசிர்வாதம் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

“இதை நீங்க என்கிட்ட சொல்லவேயில்லையே...?”

“ஸாரி… அந்த விஷயத்தை உங்ககிட்டே தெரியப்படுத்தறதுக்கு முந்தி, அது மனித விரல்கள்தானா, இல்லை வேற ஏதாவது ஒரு மிருகத்தோட எலும்புகளான்னு தெரிஞ்சுக்கிறதுக்காக என்னோட நண்பர் டி.என்.ஏ. ஆராய்ச்சியாளர் மார்க்கண்டேயனைக் கூப்பிட்டுக் காட்டினேன். அவர் அந்த எலும்புகளைப் பார்த்துட்டு ஆய்வு பண்றதுக்காக எடுத்துட்டுப் போனார். ஆனால் மறுபடியும் எலும்புகள் கிடைத்த அந்த இடத்தைத் தோண்டிப் பார்த்து வேற ஏதாவது எலும்புகள் கிடைச்சா, ஆய்வுக்கு உபயோகமாய் இருக்கும்னு சொன்னார்.”

“அந்த ஆய்வு மூலமாய் ஒரு பெரிய விஞ்ஞான உண்மையைச் சர்வதேச அறிவியல் கழகத்துக்குத் தெரியப்படுத்தினால் பரிசுத் தொகை அவருக்குக் கிடைக்கும்னு எனக்குத் தெரிஞ்சதால நானும் அதுக்கு ஒப்புதல் கொடுத்தேன். பரிசுத் தொகையில் ஒரு பங்கும் கேட்டேன். அவரும் தர்றதாய் சொன்னார்.”

ஆசிர்வாதம் சிரித்தார்.

“பாரவாயில்லையே…! அகழ்வாராய்ச்சிக்குப் போன இடத்தில் ஒரு பிசினஸ் பேசிட்டு வந்து இருக்கீங்க. அப்புறம் என்னாச்சு...?”

“எலும்புகள் கிடைச்ச அந்த இடத்தை மறுபடியும் தோண்டப் போனோம். போன இடத்தில் ஒரு விபரீத அனுபவம்...”

“விபரீத அனுபவமா?”

“ஆமா… நல்ல பகல் நேரத்துலதான் குழிக்குள்ளே இறங்கினோம். ஆனா குழிக்குள்ளே நல்ல இருட்டு. டார்ச் லைட் வெளிச்சத்தோடு

ட்ரில்லர் மெஷின் உதவியால் குழியை மேற்கொண்டு தோண்ட முயற்சி பண்ணினபோது டார்ச் அணைஞ்சுடுச்சு. என்ன முயற்சி பண்ணியும் மறுபடியும் அதை எரிய வைக்க முடியலை.”

“அந்த இருட்டுல என்ன பண்றதுன்னு மேற்கொண்டு யோசனை பண்ணிட்டிருக்கும் போதே குழிக்குள்ளே மூணாவது நபர் யாரோ மூச்சிரைக்கிறது மாதிரி சத்தம் கேட்டது. நானும் மார்க்கண்டேயனும் அரண்டு போய் குழிக்குள்ளிருந்து மேலே வந்துட்டோம்...”

“அப்புறம்...?”

“இன்னொரு நாளைக்கு இந்த... தோண்டற வேலையை மறுபடியும் பார்த்துக்கலாம்னு சொல்லிட்டு மார்க்கண்டேயன் கிளம்பிப் போயிட்டார். நான் என்னோட இருப்பிடத்திற்கு வந்து டார்ச்லைட்டைச் சோதிச்சுப் பார்த்தேன். உள்ளே ஒரு வயர் விட்டுப் போயிருந்தது. அதுக்கப்புறம் அந்த மூச்சிரைப்புக்கு என்ன காரணம் இருக்க முடியும்னு யோசனை பண்ணிப் பார்த்தேன். நாங்க மூச்சு விட்ட சத்தம்தான் குழியில் இருந்த பாறையில் மோதி எதிரொலிச்சிருக்கலாம் என்கிற முடிவுக்கு வந்தேன்.”

“இதை மார்க்கண்டேயனுக்குப் போன் பண்ணிச் சொன்னீங்களா?”

“போன் பண்ண முயற்சி செஞ்சேன். அவர் மூணு நாளா லைன்ல கிடைக்கலை. இன்னிக்குத்தான் போன்ல கிடைச்சார். பேசினேன். விபரத்தைச் சொன்னேன். ஆனா அவர் நார்மலாய் இல்லை. ரொம்பவும் பயந்து போய் இருந்தார். கடந்த மூணு நாளாய் அவர் சரியாய்ச் சாப்பிடலை, சரியாய்த் தூங்கலை, எந்த ஒரு வேலை யையும் முழு ஈடுபாட்டோடு செய்ய முடியலைன்னு சொன்னார்.”

“இவ்வளவு கோழையாய் இருக்கீங்களேன்னு கேட்டேன். அதுக்கு அவர் பயப்பட வேண்டியதுக்குப் பயப்பட்டுத்தானே ஆகணும். கடந்த ஒரு மணி நேரமாய் எனக்கு என்ன பிரச்னை தெரியுமான்னு கேட்டார். நானும் என்ன பிரச்னைன்னு கேட்டேன்.”

“அதுக்கு அவர் என்ன சொன்னார்?”

“அவர்க்கு பத்து நிமிஷத்துக்கு ஒரு தடவை எந்த ஒரு பொருளைப் - பார்த்தாலும் அது எல்லாம் ஊதா நிறமாய்த் தெரியுதாம்.”

ஆசிர்வாதம் திடுக்கிட்டார்.

“என்னது எந்த ஒரு பொருளைப் பார்த்தாலும் அது எல்லாமே ஊதா நிறமாய்த் தெரியுதாமா?”

“ஆமா உடனே மார்க்கண்டேயன் ஒரு கண் டாக்டரைப் போய் பார்த்து இருக்கார். அவர் கண்களைச் சோதிச்சுப் பார்த்துட்டு பார்வையில் எந்தப் பிரச்னையும் இல்லைன்னு சொல்லியிருக்கார்.”

“அப்புறம்... எப்படி ஊதா நிறம்?”

“அதுதான் புரியலை.”

“சரி... மார்க்கண்டேயனைப் போய் நேர்ல பார்த்தீங்களா?”

“இப்ப பார்த்துட்டுதான் வர்றேன்!”

“எப்படி இருக்கார்?”

“நிலைமை மோசம்.”

“என்ன சொல்றீங்க... ராஜவேலு...?”

“அவருக்கு இப்போ பார்வையும் தெரியலை. கை கால்களையும் அசைக்க முடியலை.”

***

# 11

நமது பூமியில் உள்ள எல்லா நாடுகளிலும் உளவுத் துறை நிறுவனங்கள் உள்ளன. ஒரு நாட்டுக்குப் பகையாய் இருக்கும் நாடு இந்த நிமிஷம் என்ன செய்து கொண்டு இருக்கிறது. அடுத்த நிமிஷம் என்ன செய்யப் போகிறது என்பதைக் கண்டுபிடித்து விடக்கூடிய அளவுக்கு விஞ்ஞானம் விஸ்வரூபம் எடுத்துக் கொண்டு இருக்கிறது. உளவுத்துறையில் இப்போதுள்ள நவீன தொழில்நுட்பம் என்ன தெரியுமா?

விண்ணில் 2000 அடி உயரத்துக்கு மேல் உளவு காமிராக்களை நிலைநிறுத்தி எதிரி நாடுகளைக் கண்காணிப்பதுதான். இந்த காமிராக்களுக்குப் பெயர் மேப்பிங் ஃப்ளைட்ஸ், 2000 அடி உயரத்தில் இருந்து பூமியில் ஊர்ந்து செல்லும் ஒரு சிறு புழு பூச்சியைக்கூட துல்லியமாய்ப் படம் பிடிக்கக்கூடிய காமிராக்கள் இந்த மேப்பிங் ஃப்ளைட்ஸ். சந்தேகப்படும் எந்த ஒரு நபரையும் இந்தக் காமிராக்கள் மூலமாக கண்காணிக்கலாம். சாதாரண வெளிச்சத்தில் படம் பிடிக்கக்கூடிய இந்த மேப்பிங் ஃப்ளைட்ஸ் இரவு நேரங்களில் கூட திறம்பட செயல்படுபவை. கண்ணாடி ஜன்னல்களையும் ஊடுருவிக் கொண்டு படம் பிடிக்கும்

வில்லத்தனம் இருப்பதால் ஒரு தனி மனிதனின் அந்தரங்கம் பாதிக்கப்படும் அபாயமும் எதிர்காலத்தில் உள்ளது.

ஒரு மத்தியான நேரத்தில்தான் அக்னிப் புழுதி கிராமத்தைப் போய்ச் சேர்ந்து, ஈஸி சேர்க்குச் சாய்ந்து உட்கார்ந்து பேப்பர் படித்துக் கொண்டிருந்த சரித்திரப் போராசிரியர் சிவபாதத்தைப் போய்ப் பார்த்தார்கள் ஹரிவர்மாவும், டாக்டர் உதயபானுவும்.

உத்தம சோழன் அவர்களைத் தன்னுடைய அப்பாவுக்கு அறிமுகப்படுத்தி வைத்தான்.

பேப்பரை மடித்து வைத்துவிட்டு வியப்போடு அவர்களை ஏறிட்டார் சிவபாதம்.

“நீங்கல்லாம் ரொம்ப பெரியவங்க. என்னைத் தேடி இந்தக் கிராமத்துக்கு வந்திருக்கீங்க. என்ன விஷயம்?”

ஹரிவர்மா புன்னகைத்தார்.

“இந்த உலகத்துல யாரும் பெரியவங்க கிடையாது. எல்லார்கிட்டேயும் ஒவ்வொரு திறமை இருக்கு. நீங்க ஒரு சரித்திரப் பேராசிரியர். உங்களுக்குத் தெரிஞ்ச பல விஷயங்கள் எங்களுக்குத் தெரியாம இருக்க வாய்ப்பு இருக்கே...!”

விழுந்தவை போக எஞ்சியிருந்த பற்களில் சிரித்தார் சிவபாதம்.

“ஹரிவர்மா என்கிற உங்களுடைய பேர் விண்ணியல் ஆராய்ச்சித் துறையில் ரொம்பவும் பிரபலம். விண்வெளி குறித்த உங்களுடைய ஆய்வுக் கட்டுரைகளை நிறையப் படிச்சிருக்கேன். படிச்சுட்டு ஆச்சர்யத்துல மூழ்கிப் போனதும் உண்டு.”

“இப்ப நீங்க எனக்கு முன்னாடி உட்கார்ந்துட்டு இருக்கிறதைப் பார்க்கும்போது என்னாலேயே என்னை நம்பமுடியலை. என்ன விஷயமாய் என்னைத் தேடி வந்து இருக்கீங்கன்னு நான் தெரிஞ்சுக்கலாமா...?”

“ஒரு அரை மணி நேரம் உங்ககிட்டே பேசணும்…”

“தாராளமாய்ப் பேசலாம்…! அதுக்கு முன்னாடி… நல்ல வெயிலில் வந்திருக்கீங்க. மோர் சாப்பிடறிங்களா?”

“அதெல்லாம் வேண்டாம். வரும்போதுதான் இளநீர் சாப்பிட்டோம்.”

“பரவாயில்லை… கொஞ்சம் மோர் சாப்பிடலாம்… உத்தம்...! நீ

போய்க் கொண்டா. கொத்துமல்லியும், கருவேப்பிலையும் ஒரு ஈரத் துணியில் சுத்தி வெச்சிருக்கேன். கிள்ளிப் போட்டுக்கோ. உப்பு கொஞ்சம் கம்மியா இருக்கட்டும்!"

உத்தம சோழன் தலையாட்டிவிட்டு வீட்டுக்கு உள்ளேயிருந்த சமையலறையை நோக்கிப் போனான்.

உதயபானு வீட்டைப் பார்வையால் அளந்துவிட்டு சொன்னாள். "வீடு ரொம்பவும் பெரிசாயிருக்கு."

"ஏழு தலைமுறைக்கு முன்னாடி கட்டின வீடு. செம்மண், கரும்புச்சாறு, சுண்ணாம்புக் கலவையால் கட்டப்பட்ட வீடு. செங்கல் உபயோகத்துல இல்லாத காலம் அது. வீடு பழசு மாதிரித் தெரிந்தாலும் கோட்டை மாதிரி உறுதி வாய்ந்த வீடு."

"இந்த வீட்ல இப்ப நீங்க மட்டும் தான் இருக்கீங்களா?"

"ஆமா. என்னோட ஒய்ஃப் இறந்து போன பின்னாடி என் பையன் என்னைச் சென்னைக்கு கூப்பிட்டான். ஆனா, எனக்கு இந்த வீட்டை விட்டுப் போக மனசு இல்லை. எனக்கு நல்லா சமைக்கத் தெரியும். இதே ஊர்ல என்னோட வயசுல ஏழெட்டுப் பேர் இருக்கோம். சாய்ந்தரமானா பைரேஸ்வரர் கோயிலுக்குப் போயிடுவோம். பொழுது எப்படியோ நிம்மதியா போயிட்டிருக்கு. நான் சென்னைக்கு வரலைன்னாலும் என்னைப் பார்க்கிறதுக்காக வெவ்வேறு துறைகளில் பெயர் பெற்ற நீங்க ரெண்டு பேரும் வந்திருக்கிறது எனக்குப் பெருமையாய் இருக்கு. நான் உங்களுக்காக என்ன செய்யனும் சொல்லுங்க…!"

உதயபானு சில விநாடிகள் தயக்கமாய் இருந்து விட்டு மெல்ல பேச்சை ஆரம்பித்தாள்.

"உங்க சன் உத்தம சோழன் சம்பந்தமாய் சில விவரங்கள் எங்களுக்குத் தேவைப்படுது…!"

சிவபாதத்தின் நரை புருவங்கள் உயர்ந்தன.

"உத்தம சோழன் சம்பந்தமாய் சில விவரங்களா...?"

"ஆமா..! உங்க பையனுக்கு இருக்கிற பிரச்னை உங்களுக்குத் தெரியாமல் இருக்க வாய்ப்பு இல்லை…"

"அ...அ... அவனுக்கு என்ன பிரச்னை?"

“அந்த வேற்றுக் கிரகவாசிகளின் கனவு...!”

சிவபாதத்தின் முகம் சட்டென்று ஒரு மாறுதலுக்கு உட்பட்டது. மெல்ல குரல் நடுங்கியது. சமையலறை பக்கம் ஒரு முறை பார்த்து விட்டு உதயபானுவையும் ஹரிவர்மாவையும் ஏறிட்டார்.

“மறுபடியும் அது மாதிரியான கனவுகளைக் காண ஆரம்பிச்சுட்டான் போலிருக்கு...!”

“மறுபடியும்ன்னா...?”

“உத்தம சோழன் ஸ்கூல் டேஸ்ல படிக்கும்போது பைரேஸ்வரர் கோயிலுக்குப் போவான். கோயிலில் இருக்கிற பூசாரி அந்தக் கோயிலில் இருக்கிற கல்வெட்டுகளையும் அதில் செதுக்கப்பட்டிருக்கிற வாசகங்களையும் காட்டி கற்பனையா சில கதைகளைச் சொல்லியிருக்கார். அதுல ஒரு கற்பனைக் கதைதான் வேற்றுக் கிரகவாசிகள் பற்றியது.”

“நான் ஒரு சரித்திரப் பேராசிரியராய் இருந்ததால என்கிட்டேயும். அந்தக் கதைகளைச் சொல்லி விளக்கம் கேட்டான். அவன் நச்சரிப்புத் தாங்காம சில சமயங்களில் ‘ஆமா...! அப்படியெல்லாம் நடக்க வாய்ப்பு இருக்கு’ன்னு சொல்லிட்டுப் போயிடுவேன்!”

“அவனுக்குப் பன்னிரண்டு வயசாகி, ஏழாவது வகுப்புக்குப் போன போதுதான் பிரச்னை ஆரம்பமாச்சு. ஒரு நாள் ராத்திரி தூங்கி எந்திரிச்சதுமே, வேற்றுக் கிரகவாசிகள் பற்றிய கனவு கண்டதாய் சொன்னான். நான் அதைப் பெரிசா பொருட்படுத்தலை. ஆனா, அதுக்கு அடுத்த நாளும், தொடர்ந்து ஒவ்வொரு நாளும் அதே கனவைக் கண்டதாய்ச் சொன்னான். நானும் அவனுடைய அம்மாவும் பயந்து போய் மதுரையில் இருக்கிற ஒரு சைக்யாட்ரிஸ்ட் டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போனோம்.

“டாக்டர் பேரு ப்ரவீன்குமார். அவர் ட்ரீட்மெண்ட் கொடுத்துட்டு இருக்கும்போதே உத்தம சோழனோட மனநிலை பாதிக்கப்பட்டது. ஒரு ஆறுமாத காலம் சிம்மக்கல்லுக்குப் பக்கத்தில் இருக்கிற மனநல மருத்துவ மனையில் வெச்சு வைத்தியம் பார்த்தோம். அதுக்கப்புறம்…!”

சிவபாதம் மேற்கொண்டு பேசும் முன்பு ஒரு தட்டில் மோர் நிரம்பிய டம்ளர்களை வைத்துக் கொண்டு உத்தம சோழன் சமையலறையிலிருந்து வெளிப்பட்டான்.

சிவபாதம் உடனே பேச்சை மாற்றினார்.

“இந்த அக்னிப் புழுதி கிராமம் இப்போ எவ்வளவோ மாறிடுச்சு. கிராமம் மட்டும் இல்லை. ஜனங்களும் மாறிட்டாங்க...!”

“ஆனா… நீங்க மட்டும் மாறலை அப்பா. நான் அன்னிக்குப் பார்த்த மாதிரியே இன்னமும் இருக்கீங்க…!”

உத்தம சோழன் சொல்லிக் கொண்டே மோர் டம்ளர்களோடு நெருங்கினான். இரண்டு பேரிடமும் நீட்டினான்.

உதயபானு ஒரு டம்ளரை எடுத்துக் கொண்டே உத்தம சோழனிடம் கேட்டாள்.

“இந்த ஊர்ல பார்மஸி இருக்கா?”

“இருக்கு டாக்டர்!”

“நான் வழக்கமாய் சாப்பிடற பி.பி. மாத்திரையைக் கொண்டு வர மறந்துட்டேன். ஒரு ரெண்டு மாத்திரை வாங்கிட்டு வர முடியுமா?”

“என்ன டாக்டர்… இதுக்குப் போய் இவ்வளவு தயக்கம்...? மாத்திரையோட பேர் சொல்லுங்க. நான் போய் வாங்கிட்டு வந்துடறேன்.”

“பார்மஸி தூரமா?”

“கொஞ்சம் தூரம்தான். நோ ப்ராப்ளம் டாக்டர். அப்பாவோட சைக்கிள் இருக்கு. பதினைஞ்சு நிமிஷத்துல போய்ட்டு வந்துடுவேன்.”

உதயபானு ஒரு மாத்திரையின் பெயரை ஒரு துண்டு சீட்டில் எழுதிக் கொடுக்க, உத்தம சோழன் அதை வாங்கிக் கொண்டு வேக வேகமாய் வெளியே போனான்.

உதயபானு சிவபாதத்திடம் நிமிர்ந்தாள்.

“இனி மேற்கொண்டு சொல்லுங்க. உத்தம சோழன் மன நோயால் பாதிக்கப்பட்டு ட்ரீட்மெண்ட் குடுத்ததால குணமாயிட்டானா...?”

“ம்... ஆறே மாசம் குணமாயிட்டான். இதுல இருக்கிற ஒரு ஆச்சர்யமான விஷயம் என்னன்னா... அவனுக்கு மனநலம் பாதிக்கப்பட்டதோ ட்ரீட்மெண்ட் குடுத்து குணமானதோ அவனுக்குத் தெரியலை. அதாவது அவனுக்கு ஞாபகம் இல்லை.”

“தான் தன்னுடைய பன்னிரண்டாவது வயதில் மனநலம் பாதிக்கப்பட்டதும் குணமானதும் இன்றளவும் உத்தம சோழனுக்குத் தெரியாதா?”

“தெரியாது...!”

ஹரிவர்மா புன்னகைத்தார்.

“உத்தம சோழனுக்குப் பின்னாடி இப்படியொரு ஃப்ளாஷ்பேக் இருக்கும்ன்னு… நாங்க நினைச்சுக்கூடப் பார்க்கலை.”

உதயபானு கேட்டாள்: “மனநலம் பாதிக்கப்பட்டு குணமான பின்னாடி உத்தம சோழனுக்கு அந்த வேற்றுக் கிரகவாசிகள் கனவு வரவேயில்லையா...?”

“வரவேயில்லை…! இப்ப நீங்க வந்து சொல்ற விஷயங்களைக் கேட்கும்போதுதான் எனக்கு ஆச்சர்யமாய் இருக்கு. மறுபடியும் அவனுக்கு இந்த வேற்றுக் கிரகவாசிகள் பற்றிய கனவு வர ஆரம்பிச்சுருக்குன்னு நினைக்கிறேன்…!”

ஹரிவர்மா குறுக்கிட்டார். “உங்க மகன் தன்னோட பன்னிரண்டாவது வயதில் கண்ட வேற்றுக் கிரகவாசிகள் பற்றிய கனவுக்கும் இப்போ அவன் கனவு காண்கிற வேற்றுக் கிரகவாசிகள் பற்றிய கனவுக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு…!”

“என்ன வித்தியாசம்?”

“உங்க மகன் உத்தம சோழன் இப்ப காண்கிற கனவில் நான் கண்டுபிடிச்ச சோல்ட்ரான் கிரகம் வருதே...! நான் சில வருஷங்களுக்கு முன்பு 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் 'சாட்ராஸ்’ என்ற ஒரு நட்சத்திரத்தை, பூமி மாதிரியான ஒரு கிரகம் சுற்றி வர்றதையும் அந்த சோல்ட்ரான் கிரகத்தில் நம்மைப் போன்றே மனிதர்கள் வாழக்கூடிய வாய்ப்பு இருக்கின்றதையும் நாசா விண்வெளி ஆராய்ச்சிக்குப் புகைப்பட ஆதாரங்களோடு அனுப்பி வெச்சேன்.”

“பட்… அதுக்கான ரெகக்கனைசேஷன் கிடைக்கலை. ஆனா நான் கண்டுபிடிச்ச அந்தச் சோல்ட்ரான் கிரகத்தைப் பற்றிய உண்மைகள் உத்தம சோழனுக்கு கனவாய் வந்து இருக்கு. சோல்ட்ரான் ஒரு ஊதாநிற கிரகம். அந்தக் கிரகத்தில் வாழ்கிற எல்லா உயிரினங்களும் ஊதா நிறத்தில்தான் இருக்கும். இதைவிட இன்னொரு ஆச்சர்யம் - அந்தக் கிரகவாசிகள் ரெண்டு பேரோட பெயர்களை அஸ்ரா,

லியோன்னு சொல்றான்.”

“இந்த வீட்டிலிருந்து புறப்படற ஒரு எலக்ட்ரான் கதிர்வீச்சு அந்தச் சோல்ட்ரான் கிரகத்தைப் பாதிப்புக்கு உள்ளாக்குகிறதாகவும், அதைக் கண்டுபிடித்து அழிக்க அந்தக் கிரகவாசிகள் ரெண்டு பேர் புறப்பட்டு வரப் போவதாகவும் சொல்றான். இது எப்படிச் சாத்தியம்னு எனக்குத் தெரியலை. இந்த வீட்ல உத்தம சோழனோட ரூம் எது...?”

“மாடியில் முதல் அறை...!”

“அவன் மாத்திரை வாங்கிட்டு வர்றதுக்குள்ளே நான் அந்த அறையைப் பார்க்கலாமா?”

“வாங்க...” சிவபாதம் எழுந்தார்.

சற்றே பழமையான மாடிப்படிகளில் ஏறி வராந்தாவில் இருந்த முதல் அறைக்குள் நுழைந்தார்கள்.

“அவனோட அறை இதுதான். நான் அறைக்குள்ளே வர்றதேயில்லை.”

சிறிய அறை. அவ்வளவு சுத்தமாக இல்லை. பெயிண்ட் உதிர்ந்து போன ஒரு பழைய மர ஷெல்ஃபில் நிறையப் பழைய புத்தகங்கள்.

ஹரிவர்மா ஷெல்ஃபை நெருங்கி ஒவ்வொரு புத்தகமாய் எடுத்துப் பார்த்தார். தலைப்புகள் கண்ணில் பட்டன.

'ஆர்யப்பட்டா - ஓர் ஆய்வு'

'வராஹ மிஹிரரும் வான சாஸ்திரமும்'

‘புரிந்தும் புரியாத உண்மைகள்’

'இன்னும் ஒரு 300 வருடம் கழித்து இந்தப் பூமி?’

ஹரிவர்மா சிவபாதத்தை திரும்பிப் பார்த்தார்.

“உங்க மகனோட அறையில் இத்தனை வான சாஸ்திர புத்தகங்கள் இருக்கும்போது அவனுக்கு ஏன் வேற்றுக் கிரகவாசிகளைப் பற்றிய கனவு வராது...?”

சிவபாதம் முகத்தில் இப்போது லேசாய் ஒரு கவலை கோட்டிங். பெருமூச்சொன்றை வெளியேற்றியபடியே சொன்னார்.

“நான் அவனைச் சரியாய் கவனிக்கத் தவறிட்டேன். அவனுடைய உள்மனசுக்குள்ளே இன்னமும் அந்த வேற்றுக் கிரகவாசிகள் பற்றிய எண்ணங்கள் இருந்திருக்கு…!”

“அங்கிள்! இதைப் பார்த்தீங்களா...?”

செல்ஃபின் ஒரு மூலையில் செருகி வைக்கப்பட்டு இருந்த பேப்பர் கட்டிங் ஒன்றை எடுத்துக் காட்டினாள் உதயபானு.

ஹரிவர்மா வாங்கிப் பார்த்தார். அவருடைய முகப் பிரதேசம் முழுவதும் அதிர்ச்சி அலைகள் பரவியது. அது ஒரு ஆங்கில நாளிதழின் ‘சயின்ஸ் பேஜ்’ என்ற கட்டுரைப் பகுதியிலிருந்து கத்தரித்து எடுக்கப்பட்ட செய்தி. படிக்க ஆரம்பித்தார். தமிழாக்கம் மனசுக்குள் ஓடியது.

இந்திய விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவின் விண்வெளிக் கண்டுபிடிப்பை நாசா விண்வெளிக் கழகம் நிராகரித்தது. இந்திய விண்வெளி ஆராய்ச்சிப் பிரிவில் பணி புரிந்து ஓய்வு பெற்ற மூத்த விஞ்ஞானி ஹரிவர்மா 115 ஒளியாண்டுகளுக்கு அப்பால் இருக்கும் ஒரு நட்சத் திரத்தின் பெயர் சாட்ராஸ் என்றும், அது நம் சூரியனைப் போலவே உள்ளது என்றும், அந்த நட்சத்திரத்தைச் சுற்றி நம் பூமியைப் போலவே ஒரு கிரகம் சுழன்று வருவதாகவும் கண்டுபிடித்து அது தொடர்பான புகைப்படங்களையும் சான்றுகளையும் நாசாவின் விண்வெளிக் கழகத்துக்கு அனுப்பியிருந்தார்.

அந்தப் பூமி போன்ற கிரகத்திற்கு சோல்ட்ரான் என்று பெயரிட்ட விஞ்ஞானி ஹரிவர்மா, அது ஒரு ஊதாநிறக் கிரகம் என்பதையும், அங்கே உள்ள உயிர் இனங்கள் எல்லாமே ஊதா நிறத்துடன் இருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தார். இந்த அரிய கண்டுபிடிப்புக்கு உரிய அங்கீகாரம் கிடைக்கும் என்று நம்பிக் கொண்டிருந்த ஹரிவர்மாவுக்கு ஏமாற்றம் தரும் வகையில் நாசா விண்வெளிக்கழகம் ஒரு அறிக்கையை வெளியிட்டது.

அந்த அறிக்கையில் ஹரிவர்மாவின் புதிய கிரக கண்டுபிடிப்பு இன்னமும் சரியான முறையில் ஆராயப்பட வேண்டுமென்றும், சாட்ராஸ் என்பது சூரியன் போன்ற நட்சத்திரம் அல்ல என்றும், அது ஒரு வால் நட்சத்திரம் என்றும், அதைச் சுற்றியுள்ள வாயுக்கோளங்கள் கிரக அமைப்பைப் போல் தென்படுவதுதான் உண்மை என்றும் குறிப்பிட்டுள்ளது. இதன் காரணமாய் இந்திய விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவின் விண்வெளிக் கண்டுபிடிப்பான சோல்ட்ரான் நிராகரிக்கப்பட்டுவிட்டது.

இது குறித்து விஞ்ஞானி ஹரிவர்மாவிடம் கேட்ட போது, ‘உலகம் உருண்டை என்பது முதலில் ஒப்புக் கொள்ளப்படவில்லை. பின்னாளில் அது ஒப்புக்கொள்ளப்பட்டது. அதைப் போல்தான் இந்த சோல்ட்ரானும் ஒரு நாள் உண்மையாகும். அந்தச் செய்தி உண்மை என்று தெரியும்போது நான் சொர்க்கத்தில் இருப்பேன்’ என்று சொன்னார்.

ஹரிவர்மா பேப்பர் கட்டிங்கைப் படித்துவிட்டு உதயபானுவை ஏறிட்டார். பெருமூச்சொன்றை வெளியேற்றி விட்டு சொன்னார்.

“உத்தம சோழன் உன்கிட்டேயும் முழு உண்மைகளைச் சொல்லலை; என்கிட்டேயும் உண்மைகளைச் சொல்லலை…”

“ஸாரி ஸார்...”

பின் பக்கம் குரல் கேட்டு மூன்று பேரும் திரும்பிப் பாரத்தார்கள்.

உத்தம சோழன் நின்றிருந்தான்.

***

# 12

எழுநூறு வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த நம் முன்னோர்கள் பூமியை மையமாக வைத்துத் தான் சூரியன் முதலான கிரகங்கள் சுற்றி வருகின்றன என்று தீர்மானமாய் நம்பிக் கொண்டிருந்தார்கள். ஆனால் விஞ்ஞானி கலிலியோ கோள்களைத் துல்லியமாய் ஆராய்ந்து சூரியன் பூமியைச் சுற்றிவரவில்லை. பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது என்று சொன்னார். அதற்கான விளக்கத்தையும் சொன்னார். ஆனால் அப்போது இருந்த விஞ்ஞானிகள் அதை ஒப்புக்கொள்ளவில்லை. எல்லா மதங்களும் அவர்க்கு எதிராய்க் குரல் கொடுத்தன. இயற்கைக்குப் புறம்பாய்ப் பேசுகிறார் என்று சொல்லி அவர்மீது முட்டைகளையும் அழுகிய தக்காளிகளையும் வீசினர்.

ஆனாலும் கலிலியோ தன் வாழ்நாள் முழுவதும் அதையே விடாப்பிடியாய் சொல்லிக் கொண்டு இருந்து விட்டு இறந்துவிட்டார். அதற்குப் பிறகு 350 ஆண்டுகள் கழித்து நம் பூமிதான் சூரியனைச் சுற்றி வருகிறது என்கிற உண்மை வெளிச்சத்திற்கு வந்தபோது கலிலியோவைத் தண்டித்தவர்கள் யாரும் உயிரோடு இல்லை.

ராஜவேலுவும், இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சிக் கழகத்தின் தலைவர் டேவிட் ஆசிர்வாதமும் ஹாஸ்பிடலுக்குப் போய் மார்க்கண்டேயனைப் பார்த்துப் பேச முற்பட்டபோது அவர் சுயநினைவோடு இல்லை. இருதயத் துடிப்பும் சுவாசத் துடிப்பும் சீராய் இருந்தது. க்ளுக்கோஸ் துளித் துளியாய் ட்யூப்பில் பயணித்து ரத்தத்தில் கலந்து கொண்டிருந்தது.

சார்ட்டில் எதையோ எழுதிக் கொண்டிருந்த டாக்டர் வரத்தை ராஜவேலு நெருங்கினார்.

“டாக்டர்…! மார்க்கண்டேயனுக்கு எப்போது நினைவு திரும்பும்?”

“அயாம் எக்ஸ்ட்ரீம்லி ஸாரி”

“என்ன டாக்டர் சொல்றீங்க?”

“அவருக்கு இனிமேல் நினைவு திரும்ப 99 சதவீதம் வாய்ப்பு இல்லை. அந்த ஒரு சதவீதத்தின் அடிப்படையில் சுயநினைவு திரும்பினாலும் அவரால் பேச முடியாது. பார்க்கவும் முடியாது. இப்போதைக்கு அவருடைய நிலைமையைப் பத்திச் சொல்லணும்னா… அவரும் அந்தக் கட்டிலும் ஒண்ணு. எந்த நிமிஷமும் உயிர் பிரியலாம்.”

ராஜவேலு படபடத்தார்.

“டாக்டர்…! மார்க்கண்டேயன் சாதாரண நபர் இல்லை. அவர் ஒரு டி.என்.ஏ. சயன்டிஸ்ட். இண்ட்டர் நேஷனல் அளவில் புகழ் பெற்றவர். அட் எனி காஸ்ட்… யூ ஹேவ் டூ ஸேவ் ஹிஸ் லைஃப்.”

டாக்டர் வரத் விரக்தியாய் புன்னகைத்தார்.

“ட்ரீட்மெண்ட் தர்றது மட்டும்தான் என்னோட வேலை உயிரைக் காப்பாத்தறது மேல இருக்கிறவனோட வேலை.”

“டாக்டர்! மார்க்கண்டேயனை வெளிநாட்டுக்குக் கூட்டிப் போய் ட்ரீட்மெண்ட் எடுத்தா உயிர் பிழைக்க வாய்ப்பு இருக்கா...?”

“அதே ஒரு சதவீதம்தான் வாய்ப்பு இருக்கு…!”

“அவர்க்கு என்னதான் நேர்ந்தது டாக்டர்…?”

“தெரியலை நேத்துவரைக்கும் பத்து நிமிஷத்துக்கு ஒரு தடவை எல்லாமே ஊதா நிறமாய்த் தெரியுதுன்னு சொன்னார். அதுக்கப்புறம் தொடர்ந்து ஊதா நிறமாய் இருக்குதுன்னு சொன்னார். பிறகு அவரால் கைகளையும் கால்களையும் அசைக்க முடியலை.

ட்ரீட்மெண்ட் கொடுத்துட்டு இருக்கும்போதே. தன்னோட சுயநினைவையும் இழந்து விட்டார். டோட்டல் கோமா. கொஞ்ச நேரத்துக்கு முந்தி ஒரு டாக்டர் குழு வந்து செக் பண்ணிப் பார்த்துட்டு இந்த ரிப்போர்ட்டைக் குடுத்துட்டு போயிருக்காங்க!”

“டாக்டர்! நீங்க சொல்றதைப் பார்த்தா...?”

“நோ... ஹோப்... இந்த நிமிஷம் இவர் உயிரோடு இருக்கார். அடுத்த நிமிஷம் உயிரோடு இருப்பாரா இல்லையான்னு எனக்குத் தெரியாது. தட் காட் ஒன்லி நோஸ்…!”

டாக்டர் வரத் சொல்லிவிட்டு அடுத்த பேஷண்ட்டைப் பார்ப்பதற்காகக் கிளம்பிவிட, ராஜவேலுவும் ஆசிர்வாதமும் இருண்டு போன முகங்களோடு ஒருத்தரையொருத்தர் பார்த்துக் கொண்டார்கள்.

ஆசிர்வாதம் தன்னுடைய நெற்றியைக் கவலையாய்த் தேய்த்துக் கொண்டே ராஜவேலுவிடம் கேட்டார்.

'டி.என்.ஏ. ஸ்பெஷலிஸ்ட் மார்க்கண்டேயனுக்கு இப்படி ஒரு நிலைமை ஏற்படக் காரணம் ஸ்லிப் ராக் ஃபாரஸ்டில் கண்டெடுக்கப்பட்ட அரிதான அந்த அப்நார்மல் சைஸ் மனித விரல் எலும்புகளாய் இருக்கலாம்னு நினைக்கிறேன். அவர் அந்த விரல்களை வெச்சு ஆராய்ச்சி செய்யும்போது ஏதாவது பிரச்னை ஏற்பட்டு இருக்கலாம்கிறது என்னோட கெஸ் ஒர்க். நீங்க என்ன நினைக்கிறீங்க ராஜவேலு?”

“என்னோட நினைப்பும் அதுதான் ஆசிர்வாதம்! அந்த ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்கு ஒரு பின்னணி இருக்கு. அதாவது அந்த ஃபாரஸ்ட்டுக்கு நூறு ஆண்டுகளுக்கு முன்புவரை, வேற்றுக் கிரகவாசிகள் வந்து ராத்திரி வேளைகளில் தங்கிட்டுப் போனதாய் அக்னிப் புழுதி கிராமத்தில் உள்ள பாதாள பைரேஸ்வரர் கோயில் கல்வெட்டுகளில் செய்தி இருக்கிறதாம்.”

“அந்த நீளமான மனிதக் கை விரல் எலும்புகள் கூட வேற்றுக் கிரகவாசியின் விரல் எலும்புகளாய் இருக்கலாம். அதில் இருக்கும் டி.என்.ஏ.க்களை மார்க்கண்டேயன் சோதனை செய்யும்போதுதான் உடல் அளவில் அவர் பாதிக்கப்பட்டு இருக்கணும்.”

“ஆயுதத்தைக் கையில் எடுத்தவனுக்கு ஆயுதத்தால் மரணம்னு சொல்லுவாங்க. மார்க்கண்டேயன் விஷயத்திலும் இப்போ அதுதான் நடந்திருக்கு. அந்த ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்குள்ளே ஏதோ ஒரு

விபரீதமான முறையில் அமானுஷ்யம் ஒளிஞ்சிட்டு இருக்கு. அது என்னன்னு கண்டுபிடிக்கணும்!”

“சில நாட்கள் போகட்டும். மறுபடியும் அங்கே ஒரு ஆர்க்கியாலஜி டீமை அனுப்புவோம்…!”

***

# 13

இப்போது இந்த உலகத்தில் இருக்கும் எல்லா விஞ்ஞானிகளின் நோக்கமும் ஒன்றே ஒன்றுதான். அது. இந்தப் பிரபஞ்சம் எப்படி உருவானது? அதனுடைய காரணகர்த்தா இறைவனழ அல்லது இயற்கையா என்று கண்டுபிடிப்பதே! விண்வெளி வல்லுநர்கள் எல்லோரும் சொல்லும் ஒரே ஒரு உண்மை. இந்தப் பிரபஞ்சம் 1500 கோடி வருடங்களுக்கு முன்பு ‘பிங் பாங்க்’ எனப்படும் ஒரு வெடிப்பு நிகழ்வின் மூலம் உருவாகியிருக்க வேண்டும் என்பதுதான். எது எப்படியிருந்தாலும் நமக்கு நாம் வாழும் பூமிதான் முக்கியம். இந்தக் காற்று, இந்தத் தண்ணீர், இங்கே விளையும் உணவுகள் மனிதனுக்குத் தேவை. இதில் மட்டும் மனிதன் கவனம் செலுத்தினால் போதுமானது.

பிரபஞ்சம் எப்படி உருவானது என்கிற ஒரு நிஜ உண்மையை அடுத்த ஆயிரம் வருடத்துக்குள் எந்த ஒரு விண்ணியல் விஞ்ஞானியாவது கண்டுபிடித்து விடுவார். இப்போது நீங்கள் செய்ய வேண்டிய ஒரே ஒரு வேலை இந்தியத் தொலைக்காட்சிகளில் முதல் முறையாக ஒளிபரப்பப்படும் ஒரு திரைப்படத்தை ஏதாவது ஒரு டி.வி.யில் போய்ப் பார்ப்பதுதான்.

உத்தம சோழன் கையில் மாத்திரை பட்டையுடன் மெல்ல நடந்து மூன்று பேர்க்கும் பக்கத்தில் வந்தான்.

ஹரிவர்மா வரவழைத்துக் கொண்ட ஒரு புன்னகையுடன் கேட்டார்.

“விண்வெளி சம்பந்தப்பட்ட இத்தனை புத்தகங்களும் உன்னோடதுதானா?”

“ஆமா… ஸார்…!”

உதயபானு குறுக்கிட்டாள். “என்கிட்ட ட்ரீட்மெண்ட்டுக்காக வந்தபோது இது மாதிரியான புத்தகங்களை நான் படிச்சதில்லைன்னு சொன்னதாய் ஞாபகம்.”

“ஸாரி… டாக்டர்… நான் இது மாதிரியான விண்வெளி சம்பந்தப்பட்ட புத்தகங்களைப் படிக்கிறதாய் உங்ககிட்டே சொல்லியிருந்தா, நான் கண்ட சோல்ட்ரான் கிரக கனவுக்குக் காரணம் அந்தப் புத்தகங்கள்தான்னு ஒரே வரியில் சொல்லியிருப்பீங்க. என் வீடு தேடி இவ்வளவு தூரம் வந்திருக்க மாட்டீங்க. புகழ் பெற்ற விண்ணியல் விஞ்ஞானி ஹரிவர்மாவை இவ்வளவு பக்கத்திலிருந்து பார்க்கக்கூடிய பாக்கியம் எனக்குக் கிடைச்சிருக்காது!”

“அப்படீன்னா நீ கண்ட சோல்ட்ரான் கிரக கனவும், வேற்றுக் கிரக மனிதர்கள் அஸ்ரா, லியோ என்பதும். எல்லாமே பொய்யா?” ஹரிவர்மா சற்றே கோபமாய்க் குரலை உயர்த்திக் கொண்டு கேட்டார்.

“இல்ல ஸார்… அது பொய்யில்லை. உண்மைதான்! வாரத்துக்கு ஒரு தடவையாவது அந்தக் கனவு எனக்கு வந்துடும். வேற்றுக் கிரகவாசிகளான அஸ்ராவும், லியோவும் நம்ம பூமிக்கு வர்றதைப் பற்றி நல்ல தமிழில் பேசிக்குவாங்க. இப்படி நான் கனவு காணுறது மூலமாய் எனக்கு ஏதாவது மனநலம் பாதிக்கப்பட்டு இருக்குமோன்னு நினைச்சுடாதீங்க. அயாம் பர்ஃபெக்ட்லி ஆல்ரைட்.”

“பகல் நேரத்துல ஒரு ஃபைவ் ஸ்டார் ஹோட்டலில் மானேஜராய் வேலை பார்க்கிறேன். வேலையில் எனக்கு இருக்கும் எஃபிஷியன்ஸைப் பார்த்துட்டு கூடிய சீக்கிரம் பிரமோஷனும் தரப் போறாங்க. இது எல்லாம் எனக்குச் சந்தோஷம் கிடையாது ஸார். எனக்காக நீங்க ஒரு பணியை மேற்கொண்டா. அதை விட வேற ஒரு சந்தோஷம் எனக்கு இருக்கவே முடியாது ஸார்.”

“அது என்னன்னு நீயே சொல்லிடு!”

“ஸார்… நான் காண்கிற சோல்ட்ரான் கிரக கனவுக்கும், என்னுடைய வீட்டுக்கும், கோயிலில் இருக்கிற கல்வெட்டு செய்திக்கும், அக்னிப் புழுதி கிராமத்தையொட்டி இருக்கும் ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்கும் ஏதோ ஒரு வகையில் சம்பந்தம் இருக்கு ஸார். அது என்னன்னு கண்டுபிடிக்க உங்களைப் போன்ற ஒரு தலைசிறந்த விஞ்ஞானியால்தான் முடியும் ஸார். உண்மையிலேயே சோல்ட்ரான் கிரகம் இருக்கு ஸார். நாசா அதை இப்போதைக்கு நிராகரிச்சாலும் என்றைக்காவது ஒரு நாள் உண்மையாகப் போகுது ஸார்.”

அதுவரைக்கும் ஒன்றும் பேசாமல் இருந்த சிவபாதம் கோபமாய்க் குரலை உயர்த்தினார்.

“டேய்…! புத்தி கெட்டத்தனமாய் எதையாவது உளறிட்டு

இருக்காதே… உன்னோட கனவுகளையும் கற்பனைகளையும் உன்னோடு நிறுத்திக்க. அதையெல்லாம் நிஜம்னு சொல்லி அவங்களைக் குழப்பாதே!”

“அப்பா! நான் நிஜம்னு சொல்ல வரலை. அது நிஜமா இல்லையான்னு ரிசர்ச் பண்ணச் சொல்றேன். ஒருவேளை நான் கண்ட கனவுகளும் நிஜமாக வாய்ப்பு இருக்கே?”

சிவபாதம் ஹரிவர்மாவிடம் திரும்பினார்.

“ஸார்! இவன் ஆர்வக் கோளாறால் ஏதோ உளறிட்டு இருக்கான். அதையெல்லாம் பெரிசா எடுத்துக்காதீங்க. உங்க ரெண்டு பேரையும் எவ்வளவு தூரம் வரவழைச்சதுக்காக நான் உங்ககிட்டே மன்னிப்புக் கேட்டுக்கிறேன்!”

ஹரிவர்மா தன் இதழோரம் புன்னகை காட்டினார்.

“நோ… நோ… இந்த விஷயத்துல நீங்க மன்னிப்பு கேட்க வேண்டிய அவசியமே இல்லை. உத்தம சோழனின் நோக்கமும் ஒரு வகையில் சரியானதுதான். இந்த உலகத்துல எல்லாமே காரண காரியத்தோடுதான் நடக்கின்றன. இன்னிக்குப் பொய்ன்னு சொல்கிற சில விஷயங்கள் நாளைக்கு உண்மையாக வாய்ப்பு இருக்கு.”

“உங்க மகன் கண்ட கனவுகளுக்கும், என்னோட ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட விஷயங்களுக்கும், இந்த கிராமத்தின் கோயிலில் உள்ள கல்வெட்டுச் செய்தி களுக்கும் ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டில் இருக்கிற விபரீதத்திற்கும், ஏதேனும் தொடர்பு இருக்கலாம். யார்க்காக இல்லேன்னாலும் உத்தம சோழனுக்காகவாவது இந்த ஆய்வு வேலையை வர்ற மாசத்திலிருந்து மேற்கொள்ளலாம்னு இருக்கேன்!”

“ஸார்…! அவன் ஏதோ சொல்றான்னு…”

சிவபாதம் குரலை இழுக்க அவருடைய கைகளைப் பற்றிக் கொண்டார் ஹரிவர்மா.

“ஒரு விஷயத்தை நீங்க புரிஞ்சுக்கணும். சொல்லப்படுகிற விஷயம்தான் முக்கியமானது. அந்த நபர் இல்லை.”

“ரொம்பவும் நன்றி ஸார்!”

கைகளைக் குவித்தான் உத்தம சோழன்.

***

# 14

இந்தப் பிரபஞ்சம் என்பது ஒரு கடல். அந்தக் கடல் நீரில் சுண்டு விரலை முக்கி எடுத்தால் அந்த விரலில் எவ்வளவு நீர் ஒட்டியிருக்குமோ அந்த அளவுதான் நாம் இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றித் தெரிந்து கொண்டது.

ஒரு வருடம் கழிந்தது. ஈ.சி.ஆர். ரோட்டில் இருக்கும் ஸ்கை பார்க் ரெஸி டென்ஸியின் இரண்டாவது தளத்தின் சிட் அவுட்டில் போடப் பட்டிருந்த நாற்காலிகளில் சாய்ந்து இருந்தார்கள் ராஜவேலுவும், ஹரிவர்மாவும்.

சாயந்தர ஏழு மணி இரவாக மாறிக் கொண்டிருக்க, கடல் காற்றில் குளிர்.

டீபாயின் மேல் அந்தத் தமிழ் நாளிதழ் காற்றுக்குப் படபடத்துக் கொண்டிருக்க... முதல் பக்கத்திலேயே அந்த விளம்பரம் பளிச்சென்று தெரிந்தது. போட்டோவுடன் கூடிய விளம்பரம். போட்டோவில் மார்க்கண்டேயன் சிரித்துக் கொண்டிருந்தார். கீழே வாசகங்கள் ஓடியிருந்தன.

முதலாம் ஆண்டு நினைவு அஞ்சலி!

எங்கள் அன்புக்குரிய நண்பனே!

டி.என்.ஏ. என்னும் விஞ்ஞானத் தாய்

பெற்றெடுத்த அறிவார்ந்த புதல்வனே!

மரபணு மருத்துவத்தில் சாதனை புரியும்

நேரத்தில் பிரிந்து சென்றாயே!

365 நாட்கள் ஓடிவிட்டன! இருந்தாலும்

*நீ –*

எங்கள் மூச்சிலும் பேச்சிலும்

இப்போதும் எப்போதும் இருக்கிறாய்!

இப்படிக்கு,

உன் பிரிவால் வாடும் நண்பர்கள்

ராஜவேலு - ஹரிவர்மா.

ராஜவேலு கையில் கோப்பையோடு சிரித்தார்.

“நாம ரெண்டு பேரும் சேர்ந்து கொடுத்த இந்த விளம்பரத்துக்கு சரியான ரெஸ்பான்ஸ். மார்க்கண்டேயனோட பொண்ணு போன் பண்ணிப் பேசும்போதே அழுதுட்டா...!”

“நல்லவேளை... தன் அப்பாவோட சுயரூபம் தெரிஞ்சிருந்தா தற்கொலை பண்ணிக்கிட்டு செத்தே போயிருப்பா!”

“ஹரி...! எனக்கு இன்னமும் ஆச்சர்யமாய் இருக்கு நம்முடைய இந்தியாவின் எதிரி நாட்டு மரபியல் விஞ்ஞானிகளோடு மார்க்கண்டேயன் தொடர்பு வெச்சுக்கிட்டு மரபணு ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட அறிக்கைகளை பரிமாறிக்கிட்டதும். வெளிநாட்டு டூர் போகும்போது ரகசியப் பேச்சு வார்த்தைகளை வெச்சுக்கிட்டதும், ஸ்விஸ் பேங்க்ல ஒரு கணக்கு தொடங்கி அதுல கோடிக்கணக்கான ரூபாயைக் கொட்டியிருக்கிறதும்... நம்ப முடியாத விஷயங்களாய் இருந்தது. ஆனா அது எல்லாம் உண்மைதான்னு தெரிய வந்த போது என்னால ஒரு வாரம் முழுவதும் சாப்பிட முடியலை. சரியாத் தூங்க முடியலை. இது எப்பேர்ப்பட்ட துரோகம்னு கொதிச்சு போனேன்.”

“உங்ககிட்ட விஷயத்தை சொன்னபோது, நீங்களும் ஆவேசமாகி இந்த நாட்டோட நலனுக்கு எதிராய் - நச்சுப் பாம்புகளாய் மாறுகிற நபர் யாராய் இருந்தாலும் சரி, எவ்வளவு பெரிய பதவியில் இருந்தாலும் சரி, அடிச்சுக் கொல்லணும்னு சொன்னீங்க. நீங்க சொன்னபடியே அந்தப் பாம்பை அடிச்சுக் கொன்னுட்டோம். டெல்லி சி.பி.ஐ., மார்க்கண்டேயனோட மரணத்தை விசாரிக்க சென்னை வந்தபோது எனக்குக் கொஞ்சம் உதறலாய்த் தான் இருந்தது. எங்கே உங்களையும் என்னையும் ஸ்மெல் பண்ணிடுவாங்களோன்னு பயமாய் இருந்தது.”

ஹரிவர்மா சிரித்தார்.

“அது எப்படி ஸ்மெல் பண்ணுவாங்க ராஜவேலு...? நாமதான் சாமர்த்தியமாய்த் திட்டம் போட்டு வேற்றுக் கிரக வாசிகளுக்கும், அக்னிப் புழுதி கிராமத்துக்கும், பாதாள பைரேஸ்வரர் கோயில் கல்வெட்டுக்கும், ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டுக்கும் ஒரு லிங்க் கொடுத்து

மார்க்கண்டேயனின் உயிருக்கு ஒரு முற்றுப்புள்ளி வெச்சிருக்கோமே?”

“மார்க்கண்டேயனுக்கு எப்படி தண்டனை தர்றதுன்னு நாம யோசிச்சிட்டு இருக்கும்போது உத்தம சோழனை டாக்டர் உதயபானு உங்ககிட்டே கூட்டிட்டு வந்ததும், அவன் கண்ட கனவை நாம பயன்படுத்திக்கிட்டதும் நாமே எதிர்பார்க்காத ஒண்ணு…! இந்த நிமிஷம் உரைக்கும் பொது மக்களும் சரி, போலீஸ் துறையும் சரி, மார்க்கண்டேயனின் மரணத்துக்குக் காரணம் வேற்றுக் கிரகம் சம்பந்தப்பட்ட ஒரு விஷயம்தான்னு நினைச்சுட்டு இருக்காங்க.

“அதிலும் சின்னச் சின்ன மனிதக் கைவிரல் எலும்புகளை எலும்பு மஜ்ஜையின் உதவியோடு ஒரு அடி நீளத்துக்குத் தயாரிச்சு, அது ஸ்லிப் ராக் ஃபாரஸ்ட்டில் ஸ்படிகம் கண்டுபிடிக்க நாங்க தோண்டின குழிக்குள்ளே ஆழமாய்ப் புதைந்து இருந்ததாய் மார்க்கண்டேயனுக்குத் தகவல் கொடுத்து அவரை வரச் சொல்லி அந்த மனிதக் கை விரல்களின் எலும்புகளை எடுத்துக் கொடுத்து அவரை ஆச்சர்யப்பட வைத்ததும் சாதாரண விஷயமா என்ன?”

“அதைவிட, அவர் மறுபடியும் அந்த இடத்தைத் தோண்டி வேறு எலும்புகள் கிடைக்குதான்னு பார்க்கணும்னு சொன்னபோது நீங்களும் அதுக்கு ஒத்துக்கிட்டு அந்தக் குழிக்குக் கூட்டிட்டுப் போய் டார்ச் லைட்டில் சில்மிஷம் பண்ணி அதை அணைய வெச்சதும்… உங்க செல்போனில் ரிக்கார்ட் பண்ணி வெச்சிருந்த மூச்சிரைப்புச் சத்தத்தை ஆன் பண்ணி மார்க்கண்டேயனை அதிரடியாய் ஓட வெச்சதும் லேசுபட்ட விஷயமா என்ன...?”

“ஹரி…! மார்க்கண்டேயன் மாதிரியான திறமையான மரபணு மருத்துவ வல்லுநர்கள் நாட்டு மக்களுக்காக உழைக்காமல் டாலர் நோட்டுக்காக ஏன் ஆசைப்படறாங்கன்னு தெரியலை. நாட்டைக் காட்டிக் கொடுக்கிறவங்க யாராய் இருந்தாலும் - எப்படிப்பட்ட உயர் பதவியில் இருந்தாலும் - சரி, நான் தயாரிச்சு வெச்சிருக்கிற வயலட் நிற பாய்ஸன் பிஸ்கெட்ஸ் மார்க்கண்டேயனோட உயிரை எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாய் எடுத்ததோ அது மாதிரி எடுக்கும்.”

“இனிமேல் அந்த பிஸ்கெட்டுகளை உபயோகப் படுத்தக்கூடிய நிலைமை நமக்கு வரக்கூடாது ராஜவேலு!”

“அப்படின்னு கடவுளை வேண்டிக்குவோம்!”

ஹரிவர்மா சொல்லிக் கொண்டு இருக்கும்போதே அவருடைய செல்போன் ரிங் டோனை வெளியிட்டது. எடுத்து அழைப்பது யார்

என்று பார்த்தார்.

உத்தம சோழன்.

“ஹலோ...!”

“ஸார்... வணக்கம்...”

“சொல்லு... என்ன விஷயம்…?”

“ஸார் மூணு மாசத்துக்கு முந்தி ஒரு ஆய்வுக் குழுவைக் கூட்டிகிட்டு என்னோட கிராமத்துக்கு வந்தீங்க. ஒரு வாரம் இருந்தீங்க. அதுக்கப்புறம் போயிட்டீங்க. மறுபடியும் வரவேயில்லையே...? உங்க ஆராய்ச்சி தொடர்ந்து நடந்தாத்தான் சோல்ட்ரான் கிரகம் பற்றிய உண்மைகள் வெளிவரும் ஸார்!”

“அடுத்த வாரம் வர்றேன்...”

“கண்டிப்பாய் வருவீங்களா ஸார்?”

“நெக்ஸ்ட் சண்டே அங்கே இருப்பேன்.”

“தேங்க்யூ ஸார்... நானும் லீவு போட்டுட்டு வந்துடறேன்…!”

“வா…! மீட் பண்ணுவோம்!” - ஹரிவர்மா பேசி விட்டு செல்போனை அணைக்க. ராஜவேலு சிரித்தார்.

“என்ன… நாடகத்துல நடிக்க அடுத்த வாரம் அக்னிப் புழுதி கிராமத்துக்குப் போறிங்களா ஹரி?”

“அது நாடகம் இல்லை ராஜவேலு!”

“பின்னே...?”

“என்னிக்காவது ஒரு நாள் நடக்கப் போகிற உண்மை!”

“எப்படி அவ்வளவு உறுதியாய் சொல்றீங்க?

“சேரன், சோழன், பாண்டியன் காலத்தில் மின்சாரம் இருந்ததா?”

“இல்லை…!”

“இப்ப இருக்கே… எப்படி...? கண்ணுக்குப் புலப்படாத சில சக்திகள் என்னிக்காவது ஒரு நாள் நம் பார்வையில் பட்டே தீரும். அதுவரைக்கும் நாம் பொறுமையோடு காத்திருக்க வேண்டியது

